


## மூன்றுவது ஸர்வகட்சி மகாநாடு.

லண்டனில் கூடிய மூன்றுவது ஸர்வகட்சி மகாநாடு சென்ற வாரம் சனிக்கிழமை இந்தியா மந்திரியின் பிரசங்கத்துடன் முடிவுபெற்றது. அதற்கு முன்னதாக மகாநாட்டில்செய்யப்பட்டிருக்கும் முடிவுகளைப்பற்றிப் பொதுவான விவாதம் நடந்தது. ஸர்டேஜ் பகதூர் சாப்ரு முதலாவதாகப் பேசுகையில் இந்திய ஜனங்களுடைய நல்ல அபிப்பிராயமே பாதுகாப்புகளுள் முதன்மையானதென்றும் சட்டத்தின் மூலம் அதை ஸ்தாபித்துவிட முடியாதென்றும் மாகாண சுயஆக்ஷியுடன் மத்திய கவர்ன்மெண்டிலும் ஜவாப்தாரித்துவம் ஏற்படுத்தப்பட வேண்டுமென்றும் அனுபவத்தில் நடத்திவைக்க இடையில் சிலமாதங்கள் மாத்திரமே வித்தியாசமிருக்கலாமென்றும் மத்திய சட்டசபையின் இந்திய மெம்பர் ஒருவரை ராணுவ மந்திரியாக நியமிக்க வேண்டுமென்றும் இப்போதைய சர்விஸ்களின் சம்பளம், பென்ஷன், கவர்ன்மெண்டின் கடன் முதலியவற்றிற்கு மாத்திரம் பாதுகாப்பளிக்கத் தயாராயிருப்பதாயும், தமது அனுபவத்தில் இந்தியாவில் எப்போதையும் விட இப்போது மனக்கசப்பு அதிகமாயிருப்பதாயும் அரசியல் ஏற்கப்படக்கூடியதாக விருந்தால் காங்கிரஸ்காரர்களுடன் தாங்கள் அதைப்பற்றி விவாதித்து அவர்கள் நம்புமாறு செய்யவேண்டுமென்றும் ஆகவே மகாத்மா காந்தியையும் மற்றவர்களையும் விடுதலை செய்ய வேண்டுமென்றும் சமஷ்டி ஸ்தாபிக்கப்படும் தேதி திட்டமாகக் குறிப்பிடப்படுவது அவசியமென்றும் சமஸ்தானங்கள் அதில் சேர முன்வராவிடில் அதற்காக மாகாண சுய ஆக்ஷியுடன் நின்றுவிடாமல் மத்தியில் ஜவாப்தாரித்துவமேற்படுத்த வேறு ஏற்பாடு செய்யப்பட வேண்டுமென்றும், இந்தியாவில் சுய மதிப்பு, தேசபக்தி இரண்டிலும் மகாத்மா காந்தி நிகரற்றவராக விருப்பதாயும், சிறையிலிருந்து கொண்டு ராஜீய விஷயங்களை விவாதிக்க அவர் மறுத்து விடுவாரென்றும் கூறினர். ஸ்ரீமான் எம். ஆர். ஜெயகர், தேசப்பாதுகாப்பு, செல்வ அதிகாரம் இரண்டுமே அரசியலிற்குத் தகுந்த சோதனைகளென்றும், ராஜீயக் கைதிகளை விடுதலை செய்ய வேண்டுமென்றும் மகாத்மாஜி தாழ்மையான நிபந்தனைகளை ஒருநாளும் ஏற்கமாட்டாரென்றும் காங்கிரஸை ஒருநாளும் நசுக்க முடியாதென்றும் கூறினர். ஸர் மனுபாய் மேட்டா பேசுகையில் வருங்கால அரசியல் நன்கு நடைபெற நல்லெண்ணமென்ற அஸ்திவாரம் போடப்பட வேண்டுமென்றும் தேசத்தில் நிலைமை அபிவிர்த்தியடைந்திருப்பதாகக் கூறப்பட்ட போதிலும் ஜனங்கள் மிகுந்த மனக்கசப்பு கொண்டிருப்பதாயும் ஆகையால் தாராளமாயும் நல்ல மனதுடனும் சுயேச்சையை யளிக்க வேண்டுமென்றும் கூறினர். ஸர். பி. தாகூர்தாஸ், இந்திய ஜனங்கள் காந்திஜியின் விடுதலையை எதிர்பார்த்துக் கொண்டிருப்பதாயும் அப்படி விடுதலைசெய்தால் தான் மகாநாட்டில் கூறப்பட்ட உறுதிமொழிகள் நடத்திவைக்கப்படுமென்று நம்பிக்கை யேற்படுமென்றும், காந்திஜி சிறையில் உள்ளவரையில் ஜனங்கள் அரசியல் தயாரிப்பதை லக்ஷியம் செய்யமாட்டார்களென்றும் ராணுவச் செலவைக் குறைக்கவேண்டுமென்றும் தங்க ஏற்றுமதியைத் தடுக்க வேண்டுமென்றும் இந்தியாவின் நாணய மதிப்பு பொதுஜனங்களுடைய திருப்தியையே பொறுத்திருப்பதாயும் கூறினர். லார்டு பீல், சமஷ்டியை நடத்தி வைப்பதில் காங்கிரஸ் கட்சியைச் சேர்த்துக் கொள்ளப் பூர்ண முயற்சி எடுத்துக்கொள்ளுவதாக ஸர் ஸாப்ரு கூறியதை வரவேற்பதாயும் அவர் வெற்றி பெற்றாலொழியச் சமஷ்டி நன்கு நடப்பது மிகவும் கஷ்டமென்றும் கூறினர்.



பம்பாயில் கூடிய அகில இந்திய கணித சாஸ்திர மகாநாடு பம்பாய் கவர்னரால் திறந்து வைக்கப்பட்ட போது எடுத்தபடம். கவர்னருக்குப் பக்கத்தில் தலைவர் ராவ் பகதூர் பி. வி. சேஷு ஐயர் நிற்கிருர். ஜிஎஸ்எ



ஆஸ்திரியாவில் இஸ்லாமியக் கலை ஐக்கியச் சங்கத்தை ஸ்தாபித்த பாரன் ஓமார் ரால்பு எரன் பெல்ஸும் பெர்லின் மசூதி இமாம் டாக்ஷேக் மகமது அப்துல்லாவும் ஐரோப்பாவிலிருந்து பம்பாயில் வந்திறங்கிய போது எடுத்த படம். ஜி.எஸ்.எ.

முடிவாக இந்தியா மந்திரி ஸர் ஸாம்யுல் ஹோர் பேசுகையில் அகில இந்திய சமஷ்டியை ஏற்படுத்துவதென்ற தீர்மானம் பிரிட்டிஷ் இந்திய சம்பந்தத்தில் ஒரு முக்கிய மாறுதலை யுண்டுபண்ணியதாயும் மூன்றுவது மகாநாட்டில் இரண்டு பலன்களேற்பட்டிருப்பதாயும் புதிய அரசியலுக்கு விரிவாகவும் திட்டமாகவும் ஒரு வரையறையேற்படுத்திவிட்டதாயும் மகாநாட்டில் எல்லாருக்குள்ளும் ஒரு அன்னியோன்னியத்தை உண்டுபண்ணிவிட்டதாயும் சமஸ்தானங்களில் பாதித் தொகையும் அவற்றின் ஜனத்தொகையில் பாதியும் சமஷ்டியில் சேருவது அதை ஆரம்பிப்பதற்குப் போதுமானதாயிருக்குமென்றும், சமஷ்டி எப்போது ஆரம்பிக்கப்படுமென்று தேதியை நிர்த்தாரணம் செய்வது கஷ்டமென்றும் கால எல்லை யேற்படுத்துவது சமஸ்தானங்களை நிர்ப்பந்தப்படுத்துவது போலிருக்குமென்றும் மேலும் பார்லிமெண்டும் அதிக எச்சரிக்கையாக விருக்க விரும்பலாமென்றும் சமஷ்டியை அமுலுக்குக் கொண்டு வரப் பார்லிமெண்டில் ஒருதீர்மானம் நிறைவேற்றப்படுவது முறையாகக் கொள்ளப் படுமென்றும், சமஷ்டி ஏற்படுவதில் உள்ள தடைகளை நீக்க கவர்ன்மெண்டார் இப்போது முதல் பூரண முயற்சி யெடுத்துக் கொள்ளுவார்களென்றும் சமஷ்டி பின்னால் எப்போதாவது வருமாறு விட்டு மாகாண சுய ஆக்ஷியை ஏற்படுத்தி விடப்போவதில்லை யென்றும், ஸிந்துவும் ஒரிஸாவும் தனி மாகாணங்களாகப் பிரிக்கப்பட்டு விடுமென்றும் பாதுகாப்புகள் உண்மையான ஜவாப்தாரித்துவத்தை யளிக்கத்தடையாக உத்தேசிக்கப் படவில்லை யென்றும், பணப் பொறுப்பையும் தகுந்தபடி மாற்றினாலொழிய உண்மையான ஜவாப்தாரித்துவத்தை

யளித்ததாக ஏற்படாதென்று கவர்ன்மெண்டார் உணர்ந்திருப்பதாயும் இந்தியா தன் பணப் பொறுப்புகளை நடத்திவைக்கவும் இந்தியாவின் நாணயத்திற்கு மதிப்பிருக்குமாறு செய்யவும் பாதுகாப்புகள் அவசியமென்றும் இதற்கு ரிசர்வ் பாங்கு ஏற்படுத்தப் படுவது அத்தியாவசியமென்றும் அதை யேற்படுத்த துரிதமாக ஏற்பாடு செய்யப்படுமென்றும், தேசப் பாதுகாப்பு மன்னர் பிரானுடைய ஏகதேசப் பொறுப்பென்றும், ஆனால் ராணுவ வரவு செலவு திட்டத்தைப் பற்றிச் சட்டசபையில் நன்றாக விவாதிக்க வசதியளிக்கப்படுமென்றும் இந்தியாவின் பாதுகாப்புக்காக வில்லாமல் வேறு காரியங்களுக்காக இந்தியாவின் படைகளை வெளியே உபயோகிக்கும் விஷயத்தில் சமஷ்டி மந்திரிசபையும் சட்டசபையும் ஒருவாறு முடிவு செய்யுமாறு ஏற்பாடு செய்யப்படுமென்றும் சாத்தியமான வரையில் அநுபவத்தில் கவர்ன்மெண்டின் இரு பிரிவுகளுக்கும் நெருங்கிய ஒத்துழைப்பு இருக்குமாறு பார்த்துக் கொள்ளப்படுமென்றும் இந்தியர்களுடைய ஒத்துழைப்பைத்தாம் பூரணமாக விரும்புவதாயும் கூட்டுக் கமிட்டி மகாநாடு நடக்கும்போது ஒரு கட்சியினரும் வராமலிருக்கக் கூடாதென்று தாம் விரும்புவதாயும் ராஜீயக்கைதிகள் விடுதலை சம்பந்தமாகத் தாம் திட்டமாகப் பதில் கூற முடியாதாயினும் ஸர் சாப்ரு கூறியதைப் பூரணமாக யோசிப்பதாயும் கூறினார்.

லார்டு ஸாங்கி கூட்டத்தை முடிக்கையில் பிரிட்டிஷ் தொழிற்கட்சியும் இந்தியக் காங்கிரஸ் கட்சியும் மகாநாட்டிற்கு வராததற்குத் தாம் வருந்துவதாயும் சமாதானத்திற்குத் தாங்கள் வேலை செய்து வருவதால் அவர்கள் சண்டைக்கு முஸ்திப்பு செய்ய வேண்டாமென்று கேட்டுக் கொள்ளுவதாயும் கூறினார்.

---

### மிஸ்டர் லாயிட் ஜார்ஜின் துணிச்சல்.

காமன்ஸ் சபையில் யுத்தக் கடன் சம்பந்தமாக விவாதம் நடந்தபோது 1922-ம் வருஷத்திய பால்பர் குறிப்பைப் பற்றியும் பல மந்திரிகளும் அதை யாதரித்த அளவைப் பற்றியும் மாஜி மந்திரிகளுள் கடுமையான விவாதமேற்பட்டது. பிறகு லார்டு சபையில் லார்டு சான்ஸலர் லார்டு ஹெயில் ஷாம் பேசுகையில் மந்திரி சபையில் நடந்த வற்றைப்பற்றிய ரகஸ்யங்களை வெளியிடும் மாஜி மந்திரிகளும் மந்திரிகளும் இரண்டு வருஷம் சிறைத் தண்டனைக்கு உட்பட நேருமென்று எச்சரிக்கை செய்தார். மீண்டும் மிஸ்டர் லாயிட் ஜார்ஜ் காமன்ஸ் சபையில் பேசுகையில் லார்டு சபை காமன்ஸ் சபை மெம்பர்களைப் பயமுறுத்துவது நூதனமாகவிருப்பதாயும் 10 வருஷங்களுக்குமுன் தாம் பிரதம மந்திரியாகவிருந்தபோது தமக்கும் ஸர் ராபர்ட் ஹார்னுக்கும் நடந்த கடிதப் போக்குவாத்தில் ஒரு பாகம் வெளியிடப்படுவதானால் தாம் பூராவையும் வெளியிட்டுவிடப்போவதாயும் தம்மை ஸர் ராபர்ட் ஹார்னுடன் சிறைக்கனுப்பினால் இப்போதைய மந்திரிகளில் பலரையும் அங்கு அனுப்பவேண்டியிருக்குமென்றும் கூறினார்.

---

### அமேரிக்காவும் யுத்தக்கடனும்.

கடன் பிரச்னையை ஆராய்வதில் இப்போதையத் தலைவர் மிஸ்டர் ஹூவருடன் ஒத்துழைக்கத் தயாராயிருப்பதாகப் புதிய தலைவர் மிஸ்டர் ரூஸ்வெல்ட் அறிவித்திருக்கிறார். இதைப் பூர்வாங்கமாக ஆராய மிஸ்டர் ஹூவர் பிரதிநிதிகளை நியமிக்கலாமென்றும் அவ்வப்போது நடப்பவற்றைத் தமக் கறிவித்து வருமாறும் மிஸ்டர் ரூஸ்வெல்ட் எழுதியிருக்கிறார்.

---

### வேலையற்றவர் கலவரம்.

பிரிட்டனில் கிளாஸ்கோ நகரத்தில் வேலை யற்றவர் ஊர்வலத்தைத் தடுக்கையில் 10 போலீஸ்காரர்கள் காயமடைந்தனர். கிளாஸ்கோ கார்ப்பொரேஷன் வேலையற்றவர் தூதுக்குப் பேட்டியளிக்க மறுத்ததை ஒட்டி அதன் கூட்டத்தில் அமளியேற்பட்டு 7 கவுன்சிலர்களும் ஒரு விசிட்டரும் வெளியேற்றப்பட்டனர்.

---

### மாஜி கேய்ஸரின் தேக அசௌக்கியம்.

மாஜி ஜெர்மன் சக்கரவர்த்தி ஹாலந்தில் டோர்ன் என்ற விடத்தில் தமது மாளிகையில் ஜலதோஷத்தாலும் முடக்கு வாயுவினாலும் அவஸ்தைப்பட்டுக்கொண்டிருக்கிறார். கிறிஸ்மஸ் கொண்டாட்டத்தின்போது அவர் மனைவி பிரின்செஸ் ஹெர்மைன் தலைமை வகித்து ஊழியர்களுக்கும் மற்றவர்களுக்கும் பரிசுகளை வழங்கினார்.

---

### ஜெர்மனியில் போது மன்னிப்பு.

ஜெர்மன் பார்லிமெண்டில் புதிய கவர்ன்மெண்டு நிறைவேற்றிய மன்னிப்புப் பிரேரணையின் பலனாக ராஜீயக் குற்றங்களுக்காகத் தண்டனையடைந்த சுமார் பதினாயிரம் ஸ்திரீகளும் குழந்தைகளும் விடுதலை செய்யப்பட்டனர்.

---

### அமேரிக்காவில் மதுபான அனுமதி ?

பீர் என்ற ஒரு வகை மதுபானத்தைத் தயாரிக்க அனுமதிக்கும்மசோதா அமெரிக்கா ஜனப் பிரதிநிதி சபையில் தனி நபரால் கொண்டு வந்து நிறைவேற்றி வைக்கப் பட்டுவிட்டது. சாதகமாக 230 பேர்களும் எதிராக 195 பேர்களும் ஓட்டுக் கொடுத்தனர். செனேட் சபையிலும் இது நிறைவேற்றப்பட்டால் தலைவர் நிராகரித்து விடுவாரென்று எதிர் பார்க்கப் படுகிறது. தலைவரின் நிராகரிப்பை மீறிநிறைவேற்றப் படுவதற்கு அவசியமான மூன்றில் இரண்டு பங்கு மெஜாரிட்டி அதற்குக் கிடைக்காதென்றும் கூறப்படுகிறது.

---

### பேர்ஸிய ராஜாங்க ஆபரணங்களின் விற்பனை.

பெர்ஸிய மன்னர் இப்போதைய பணக் கஷ்டத்தை உத்தேசித்துத் தமது முக்கிய ஆபரணங்களில் இரண்டை லண்டனிலாவது பாரிஸிலாவது விற்கத் தீர்மானித்துவிட்டார். ஒன்று பெயர்போன மயிலாசனம். இது சுமார் 60 லக்ஷம்பவுன் மதிப்புள்ளது. இன்னொன்று பெர்ஸியன் கிளவ் என்ற கையுறை. இது இரண்டடி குறுக்களவுள்ளது. 50000 கற்களுக்குமேல் பதிக்கப்பட்டது.

---

### புதிய பிரேஞ்சு கவர்ன்மேண்டு.

புதிய பிரெஞ்சு கவர்ன்மெண்டிடம் நம்பிக்கையிருப்பதாகப் பிரதிநிதி சபையில் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. சாதகமாக 365 பேர்களும் எதிராக 215 பேர்களும் ஓட்டுக்கொடுத்தனர்.

---

### வட துருவத்திற் கருகில் கப்பல் போக்குவரத்து.

உலகத்தின் தலைபோன்ற வட துருவத்திற்குச் சமீபத்தில் ருஷ்யாவிலிருந்து அமெரிக்கா செல்ல ஆர்ச்சேஞ்சலிலிருந்து பேரிங் ஜல சந்திக்கு ஒரு புதிய கப்பல் பாதை சீக்கிரம் ஏற்படுத்தப்படுமாறு சோவியத் ருஷ்ய கவர்ன்மெண்டு ஏற்பாடு செய்து வருகிறது. கப்பல்கள் பனிக்கட்டிகளை உடைத்துக்கொண்டு செல்லுமாறு தனிமையாகக் கட்டப்படும்.

---

### மிஸ்டர் மாலிஸனின் புதிய முயற்சி.

மிஸ்டர் மாலிஸன் (ஆமி ஜான்ஸனின் புருஷன்) அடுத்த மாதம் இன்னொரு பெரிய முயற்சியை நடத்தப் போவதாக அறிவித்திருக்கிறார். இங்கிலாந்திலிருந்து தென் அமெரிக்காவுக்கு அவர் நேராகப் போகக் கூடுமென்று கருதப்படுகிறது. மிஸஸ் மாலிஸன், தாம் தமது ஆப்பிரிக்காப் பிரயாணத்தினால் இன்னும் களைப்படைந்திருப்பதாயும் கொஞ்ச காலத்திற்கு ஓய்வெடுத்துக்கொள்ளப் போவதாயும் கூறினார். இருவரும் ஸ்விட்ஜர்லாந்தில் மலைப் பிரதேசத்திற்குச் சென்றிருக்கின்றனர்.



டில்லியில் உள்ள தென்னிந்திய ஸ்திரீகள் கிளப்பின் வருஷாந்தரக் கொண்டாட்டம் சமீபத்தில் நடந்தபோது எடுத்தபடம் கூட்டத்தலைவர் மிஸஸ் டி. எஸ். சங்கரஐயரும் சங்கத்தலைவர் மிஸஸ் எஸ். ஏ. வானேச்வரும் மாலைகளுடன் மத்தியில் உட்கார்ந்திருக்கின்றனர்.

# இந்திய வர்த்தமானம்

### ஸரஸ்வதி ஸ்டோர்ஸ் ஓடியோன் ரேகார்டுகள்.

சென்னை ஸரஸ்வதி ஸ்டோர்ஸின் புதிய ஓடியோன் கிராமபோன் ரெகார்டுகளில் முதலாவது வெளியீடு டிசம்பர் முதல் வாரத்திலேயே விற்பனைக்கு வந்துவிட்டது. இப்போது இரண்டாவது வெளியீடு ரெகார்டுகள் அவர்களுடைய டீலர்கள் எல்லாரிடமும் விற்பனைக்குத் தயாராயிருக்கின்றன. இதைப்பற்றிய விளம்பரம் வேறு இடத்தில் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது.

---

### சட்டமறுப்பு இயக்கம்.

சென்ற வாரம் ஆமதாபாத்தில் மறியல் செய்த 7 தொண்டர்கள் கைதுசெய்யப்பட்டனர். நவயுவக் புஸ்தக் பந்தர் சோதனை போடப்பட்டுப் பறிமுதல் செய்யப்பட்ட புஸ்தகங்கள் கைப்பற்றப்பட்டன. ஆதித்யா அச்சுக்கூடம் 2000 ரூபாய் ஜாமீன் கட்டுமாறு கேட்கப்பட்டிருக்கிறது. ஆமதாபாத் தொழிலாளர் சஙகத்தைச் சேர்ந்த மஸ்டூர் சந்தேஷ் என்ற பத்திரிகைக்கும் 2000 ரூபாய் ஜாமீன் கட்டுமாறு கேட்கப்பட்டிருக்கிறது. ஸிந்து மாகாணத்தில் டாக்டர் சோயித்ராம் விடுதலை செய்யப்பட்டு அவர் காங்கிரஸ், ராஜீய வேலைகளில் சபபந்தப்படக் கூடாதென்று உத்தரவிடப்பட்டார். லாகூர் ஜமீனதார் பத்திரிகையின் ஜாமீன 2000 ரூபாய் பறிமுதல் செய்யப்பட்டுவிட்டது. லாகூர் ஜன ஊழியச் சங்கத்தைச் சேர்ந்த லாலா ஜகன்னாத். ராஜீய இயக்கமெதிலும் சபபந்தப்படக் கூடாதென்றும் முன் அனுமதியின்றி நகருக்கு வெளியே போகக் கூடாதெனறும் உத்தர விடப்பட்டார். லாகூரில் சுமார் ஒரு டஜன் வீடுகள் பிரசுரங்களுக்காகச் சோதனை போடப்பட்டன. மாணவர் சங்கத் தலைவர் ஸ்ரீமான் ஆத்ம பிரகாச் 5000 ரூபாய் நன்னடத்தை ஜாமீன் கொடுக்கத் தவறியதாக ஒரு வருஷம் சிறை தண்டனை விதிக்கப்பட்டார். பம்பாயிலிருந்து 24 மணி நேரத்திற்குள் வெளியேறுமாறு ஸ்ரீமான் ஸ்ரீபாத சங்கருக்கு உத்தரவு சாதாரச் செய்யப்பட்டது. ஸ்ரீமான் மோகன் லால் சாக்ஷேணுவுக்கு 6 மாதம் கடுங்காவல் விதிக்கப்பட்டது. ஜபல்பூரில் மறியல் செய்ததாக 9 பேர்கள் கைதியாயினர். ஒரு தொண்டர் டெப்டி கமிஷனர் கோர்ட்டில் அவர் ஆசனத்தில் உட்கார்நதுகொண்டு அமுல் நடத்தினர். இன்னொரு தொண்டர் யூனியன் ஜாக் கொடியை இறக்கினர். இருவரும் கைதியாயினர். பண்டித ராமகோபால் சாஸ்திரி கைதியானர். கள்ளிக்கோட்டையில் கேரளதின ஊர்வலததை ஒட்டி ஸ்ரீமான் டி. என். ராமுண்ணிமேனனும் 11 தொண்டர்களும் தண்டிக்கப்பட்டனர். மதுரையில் மறியல தொண்டர்கள் பலவந்தமாகக் கலைக்கப்பட்டு வருகின்றனர். வடக்கு மலையாள யுவர்மகாநாட்டை ஒட்டி 20 பேர்களுக்கு மேல் கைது செய்யப்பட்டனர்.

---

### குருவாயூர் ஆலயப் பிரவேசம்

குருவாயூர் ஆலயப் பிரவேசத்தைப்பறறிப் பொன்னணித் தாலுக்காவில், கோவிலுக்குச் செல்லக்கூடிய ஜாதி ஹிந்துக்களிடம் ஓட்டுவாங்கப்பட்டது முடிந்துவிட்டது. இப்படிக் கோவிலுக்குச் செல்லக்கூடிய ஜாதி ஹிந்துக்கள் சுமார் 65000 பேர்களிருப்பதாயும், இதில் மைனர்களை விட்டுப் பெரியவர்களிடமே ஓட்டு வாங்கப்பட்டதாயும் மொத்தம் 27465 பேர்களிடம் ஓட்டுக் கேட்கப்பட்டதில் 7248 பேர்கள் ஓட்டுக் கொடுக்கவே மறுத்து விட்டதாயும் ஓட்டுக் கொடுத்த 20167பேர்களில் 15569பேர்கள் தாழ்ந்த வகுப்பினர் ஆலயப் பிரவேசத்தையாதரித்திருப்பதாயும் 2582பேர்கள் எதிராக ஓட்டுக் கொடுத்திருப்பதாயும் 2016 பேர்கள் நடுநிலைமை வகித்திருப்பதாயும், ஆகவே ஆதாவாயுள்ளவர்களும் நடுநிலைமை வகிப்பவர்களும் 100-க்கு 87 பேர்கள வீதமிருப்பதாகவும் ஸர்வத்ர வாக்கு தீண்டாதார் ஆலயப் பிரவேசத்திற்கு ஆதரவாகவேயிருப்பதாயும் ஸ்ரீமான் ஸி. ராஜகோபாலாச்சாரியார் அறிவித்திருக்கிறார். ஸ்ரீமானகள் கேலப்பனும் ஸி. ராஜகோபாலாச்சாரியாரும் மாதவன் நாயரும் பூனாவில் மகாத்மாஜியைச் சந்திககச் சென்றிருக்கின்றனர்.

குருவாயூரில் அகில இந்திய வர்ணாச்ரம ஸ்வராஜ்ய சங்க மகாநாடு கூடியிருக்கிறது. தேசத்தின் பல பாகங்களிலிருந்தும் வைதீகர்கள் அதற்குச் சென்றிருக்கின்றனர். இது தவிர பண்டிதர்களுடைய வித்வத் பரிஷத் ஒன்றும் கூடியது.

பூனா சிறையில் மகாத்மாஜி முன்னிலையில, தீண்டாத வகுப்பினரை ஆலயங்களுக்குள் அனுமதிப்பதை யாதரிக்கும் பண்டிதர்கள், எதிர்க்கும் பண்டிதர்கள் ஆகிய இரு பிரிவினரும் கூடி விவாதித்து வருகின்றனர்.

தாழ்ந்த வகுப்பினர்களை ஆலயங்களில் அனுமதிக்கச் சென்னை சட்டசபையில் மசோதாக் கொண்டுவரப் போவதாக டாக்டர் பி. சுப்பராயன் அறிவித்து கவர்னர் ஜெனரலின் முன் அனுமதியைக் கோரியதை ஒட்டி பல மாகாண கவர்ன்மெண்டுகளையும் இந்தியா கவர்ன்மெண்டார் அபிப்பிராயம் கேட்டிருக்கிறார்களாம். ஆகவே டாக்டர் சுப்பராயன் மசோதா சம்பந்தமாக ஜனவரி 15-ந் தேதி வாக்கில் தான் இந்தியா கவர்ன் மெண்டிலிருந்து பதில் வருமென்று கூறப்படுகிறது. பதில் கிடைக்கும் வரையில் மகாத்மாஜியும் ஸ்ரீமான் கேலப்பனும் உபவாசத்தை ஒத்திவைக்க வேண்டுமென்று யோசனை கூறப்பட்டிருக்கிறது.

---

### அலகபாத் ஒற்றுமை மகாநாடு.

அலகபாத்தில் சென்றவாரம் வெள்ளிக்கிழமை ஒற்றுமை மகாநாடு மீண்டும் கூடியது. பஞ்சாப் விஷயமாக ஒற்றுமை யேற்பட்டுவிட்டது ஸ்ரீமான் ஸி. விஜயராகவாச்சாரியார் தமது தகப்பனர் சிரார்த்தத்திற்காகச் சேலத்திற்குத் திரும்பிவர நேர்ந்தது. பிறகு மகாநாட்டில் பண்டித மாளவியா தலைமை வகிக்குமாறு தேர்ந்தெடுக்கப்பட்டார். வரவு செலவு, தேசப் பாதுகாப்பு, அன்னியநாட்டு சம்பந்தம் உள்பட இந்தியா கவர்ன்மெண்டுமீது ஜனங்களுக்குப் பூரணஆதிக்கம் அளிக்க



திருச்சி ஜில்லா வைத்தியச் சங்கத்தின் மூன்ருவது வருஷாந்தரக் கொண்டாட்டம் சென்னை டாக்டர் எஸ். ரங்காச்சாரியார் தலைமையில சென்ற வாரம் நடந்தபோது எடுத்தபடம். பி. எஸ்.

வேண்டுமென்று வற்புறுத்தப் பட்டது. ஜீவாதார உரிமைகளுக்கு வியாக்கியானம் கூறப் பட்டது. மத்திய சட்டசபையில் முஸ்லிம்களுக்கு 100-க்கு 32 ஸ்தானங்களும் ஸீக்கியர்களுக்கு 4·2 ஸ்தானங்களும் இந்தியக் கிறிஸ்தவர்களுக்கு 2 ஸ்தானங்களும் ஆங்கிலோ இந்தியர்களுக்கும் ஐரோப்பியர்களுக்குமாக 1 ஸ்தானமும் அளிக்கப்படும். மத்திய கவர்ன்மெண்டின் பாஷையாக ஹிந்துஸ்தானியும் மாகாண கவர்ன்மெண்டுகளில் மாகாண பாஷையும் இருக்கும். கலப்புத் தொகுதி முறையில் முன்பு செய்யப்பட்ட முடிவே ஊர்ஜிதம் செய்யப்பட்டிருக்கிறது. பஞ்சாபில் முஸ்லிம்களுக்கு 51% ஸீக்கியர்களுக்கு 20% ஹிந்துக்களுக்கு 27% இந்தியக் கிறிஸ்தவர்களுக்கு 3 ஸ்தானங்களும் ஐரோப்பியர் ஆங்கிலோ இந்தியர்களுக்கு ஒரு ஸ்தானமும் ஒதுக்கப்படும். வங்காள விஷயம் கல்கத்தாவில் முடிவு செய்யப்படும். ஸிந்துப் பிரச்னை முன்னைப்போலவே முடிவு செய்யப்பட்டது. இந்தியாவிலிருந்து பிரிந்து போகாமலிருக்கத் தீர்மானித்ததற்குப் பர்மியர்களைப் பாராட்டுவதாகத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

பிறகு ஒற்றுமை மகாநாடு ஒத்தி வைக்கப்பட்டது. பண்டித மாளவியா டாக்டர் முஞ்சே, ஸ்ரீமான் ஆனே, டாக்டர் மகமது, ஜனப் மகமது ஹுஸேன் முதலியவர்கள் வங்காளப் பிரச்னையைத் தீர்க்க கல்கத்தா சென்றிருக்கின்றனர்.

---

## எம். எஸ். எம். ரயில்வே வேலை நிறுத்தம்.

மிஸ்டர் எப். இ. ஜேம்ஸ், ஸ்ரீமான் டி. எஸ் ராமஸ்வாமி ஐயர், டாக்டர் ஸி. நடேச முதலியார், மிஸ்டர் டி. எம். ரீட், மிஸ்டர் லீச், மிஸ்டர் லாடன் ஜனப் ஆதம் ஹாஜி மகமது ஸேட் முதலியவர்கள் மத்தியஸ்தக் கமிட்டியாகவிருந்து ஏஜெண்டுடனும் ரயில்வே ஊழியர் தலைவர்களுடனும் ராஜிப்பேச்சு நடத்தி வேலை நிறுத்தத்தை முடிவுக்குக் கொண்டு வர ஏற்பாடு செய்தனர். இதை ஆதாரமாகக்கொண்டு, டிசம்பர் 25-ந்தேதி முதல் ஆரம்பிப்பதாகவிருந்தபொது வேலை நிறுத்தம் நிறுத்தப்பட்டு ஒர்க்ஷாப் ஊழியர்களும் உடனே வேலைக்குத் திரும்ப வேண்டுமென்று முடிவு செய்யப்பட்டது. ஆனால் அரக்கோணம் இஞ்சினீரிங் ஒர்க்ஷாப்பில், 63 வேலைநிறுத்தக்காரர்களுடைய ஸ்தானங்கள் நிரந்தரமாகப் பூர்த்தி செய்யப்பட்டுவிட்டதால் அவர்கள் திரும்ப வேலைக்கெடுத்துக் கொள்ளப்பட மாட்டார்களென்று ஒர்க்ஸ் மானேஜர் அறிக்கை ஒட்டினர். இதன்பேரில் ஊழியர்கள் உடனே வேலைக்குத் திரும்ப வேண்டாமென்று தலைவர்கள் அறிவித்துவிட்டு, வேலை நிறுத்தம் செய்தவர்களில் எவரையும் நீக்குவது ஒப்பந்தத்தை மீறியதாகுமென்றும் எல்லாரையும் சேர்த்துக் கொள்ள உடனே உத்தரவு பிறப்பிக்க வேண்டுமென்றும் ஏஜெண்டுக்கு எழுதினார்கள். யூனியன் நிபந்தனைகளின்படி நடக்கத் தயாராயிருப்பதாயும் அதிகாரிகளும் அப்படிச்செய்யுமாறு மத்தியஸ்தக்கமிட்டி பார்த்துக்கொள்ள வேண்டுமென்றும் ஜனவரி 10-ந்தேதிக்குள் அவர்கள் ஒன்றும் செய்யாவிடில் பொது வேலை நிறுத்தத்திற்கு ஏற்பாடு செய்யப்படுமென்றும் ஸ்ரீமான் கிரி கூறுகிறார். ஏஜெண்டு வெளியிட்டிருக்கும் அறிக்கையில், தாம் வாக்குறுதியை மீறி ஒன்றும் செய்யவில்லையென்றும் வேலை நிறுத்த காலத்தில் குறிப்பிட்ட 64 பேர்கள் வேலைக்குத் திரும்பாவிடில் அவர்களுக்குப் பதிலாக வேறு மனிதர்கள் நிரந்தரமாக நியமிக்கப்பட்டு விடுவார்களென்று அறிவிக்கப்பட்டதில் ஆனால் ஒருவரே திரும்பியதால் சென்ற வருஷம் சிக்கனத்தால் நீக்கப்பட்ட 39 பேர்களும் 24 பேர்கள் புதிதாகவும் நிரந்தரமாக நியமிக்கப்பட்டுவிட்டதாயும் நீக்கப்பட்ட 63 பேர்களுக்கும் ரிஜிஸ்டர் நோட்டீஸ் அனுப்பப்பட்டு விட்டதாயும் மத்தியஸ்தக்கமிட்டித் தலைவரிடம் தாம் இதை அறிவித்து யூனியனுக்கு அறிவித்துவிடுமாறு கேட்டுக்கொண்டதாயும் கமிட்டித் தலைவர் யூனியன் தலைவர்களிடம் அறிவித்து விட்டதாகக் கூறியதாயும் தெரிவித்திருக்கிறார். மிஸ்டர் எப். இ. ஜேம்ஸ் இப்போது பர்மாவுக்குப் போயிருப்பதால் இவ்விஷயம் தீரவில்லை. வேலை நிறுத்தம் நீடித்திருக்கிறது.



சென்னை தண்டையார்ப்பேட்டையில் பொப்பட் ஜமால் கண்ணாடித் தொழிற் சாலை சென்ற வாரம் மந்திரி கனம் எஸ். குமாரஸாமி ரெட்டியாரால் திறந்து வைக்கப்பட்டது. படத்தில் மந்திரியுடன் கைத்தொழில் டைரெக்டர், புதிய ஷெரிப், ஜனப் பொப்பட் ஜமால் முதலியவர்களும் காணப்படுகின்றனர். பி. பி. பி.

## பர்மாப் பிரிவினை விஷயம்.

பர்மா சட்டசபையில் பல தினங்கள் விவாதம் நடந்த பின், பிரதம மந்திரியின் அறிக்கையை ஆதாரமாகக் கொண்டு பர்மாவைப் பிரிப்பதை எதிர்ப்பதாயும் நிபந்தனையின்றி நிரந்தரமாகச் சமஷ்டியில் சேருவதையும் எதிர்ப்பதாயும், இன்னும்நல்ல அரசியல் அளிக்கப்படும்வரையில் சட்டசபை பிரிவினையை எதிர்த்துக் கொண்டே வருமென்றும், உரிமையுடன் பிரிய நிபந்தனைகளின் பேரில் சமஷ்டியில் சேரலாமென்றும் சீக்கிரத்தில் அரசியலை முடிவு செய்ய ஒரு மகாநாட்டைக் கூட்ட வேண்டுமென்றும் தீர்மானம்நிறைவேற்றப்பட்டது. பிரிவினைக் கட்சித் தலைவர் தன் பிரேரணையை வாபிஸ் வாங்கிக் கொள்ள விரும்பிய போதிலும் சபை அதை அனுமதிக்காமல் பிரேரணையைத் தோற்கடித்தது.

பர்மா கவர்னர் ஸர் சார்லஸ் இன்ஸ் தமது உத்தியோக காலம் முடிந்து இங்கிலாந்துக்குப் புறப்பட்டுவிட்டார். புதிய கவர்னர் ஸர் ஹியூ ஸ்டீபன்ஸன் வந்து பதவியேற்றுக் கொண்டு விட்டார்.



தன்னுடைய பிரயாசையாலேயே முன்னுக்கு வந்த ஒரு மனிதர், "நான் பிறந்த 9-வது மாதத்திலேயே தாய் தகப்பன் இருவரையும் இழந்துவிட்டேன். அது முதல் நானே எனது போராட்டத்தை நடத்த வேண்டியிருந்தது" என்றார்.

கூட்டத்திலிருந்து ஒருவர்:—9-வது மாதத்தில் உங்களுடைய ஜீவனத்திற்கு என்ன செய்தீர்கள்?

பிரசங்கி:—நான் ஒரு குழந்தைக் காக்ஷிக்கு ஊர்ந்து சென்று முதலாவது பரிசைப்பெறேன். நான் வாழ்வையாரம்பித்தது அப்படித்தான்.

———

ஒருவரையொருவர் சந்தேகிக்கும் குணமுள்ள இருவர் சேர்ந்து கூட்டாக ஒரு மோட்டார் பஸ் வைத்தனர்; மறுநாள் இருவரும் கண்டக்டர்களாக வந்துவிட்டனர்.

———

ரங்கன்:—ஸ்திரீகளால் ரகஸ்யத்தைக் காப்பற்றவே முடியாது.

கோவிந்தன்:—என் மனைவியால் முடியும். எனக்குக் கலியாணமாகிப் பத்து வருஷங்களாகின்றன. நான் அவளிடம் எத்தனை பணம் கொடுத்தபோதிலும் அவளுக்கு இன்னும் போதாமலிருப்பதன் காரணத்தை என்னிடம் கூறியதேயில்லை.

———

மனைவி:—நான் செய்த டிபன் இன்று எப்படியிருக்கிறதென்று நீங்கள் கூறவில்லையே?

புருஷன்:—இன்று ஏகாதசியாகையால் உபவாசமிருந்துவிடலாமென்று உத்தேசிக்கிறேன்.

———

சங்கரன்:—என்ன? இன்று உன் முகம் களையாகவில்லையே?

கோவிந்தன்:—அப்பா இன்று ஊருக்குப் போவதாகவிருக்கிறார். நான் சந்தோஷமாகவிருந்தால் சந்தேகம் கொண்டு எதாவது வேறு ஏற்பாடு செய்துவிடுவார். ஆகையால்தானிப்படியிருக்கிறேன்.

———

ராமன்:—உன்னைக் கடித்த நாயின் சொந்தக்காரன்மீது நீ கொண்டுவந்த நஷ்டஈடு வழக்கு என்னவாயிற்று?

கிருஷ்ணன்:—நான்தான் அந்த நாயைக் கடித்தேனென்று அந்த மனிதனுடைய வக்கீல் ருஜுப்பித்துவிட்டார்.

———

ஹோட்டல் ரூம் காவற்காரன்:—13ம் நம்பர் அறைக்கு வந்திருப்பவா தீவிபத்தேற்பட்டால் தப்புவதற்கான வசதி எங்கே இருக்கிறது என்று கேட்கிறார்.

ஹோட்டல் மானேஜர்:—அவர் முன் பணம் கொடுத்திருப்பதால் பயம் இல்லை. அந்த அவசரகால வழியை அவருக்குக் காட்டு.

———

கோவிந்தன்:—எனக்குச் சொல்லத் தயக்கமாயிருக்கிறது. ஆயினும் உங்கள் தகப்பனர் இறக்குமுன் என்னிடம் கடனாக வாங்கிக்கொண்ட 10 ரூபாயைத் திருப்பிக் கொடுக்கவில்லை.

கிருஷ்ணன்:—அவரைப் பற்றி நீங்கள் எந்நாளும் நினைத்துக் கொண்டிருக்குமாறு ஏற்பட்டு விட்டதற்குச் சந்தோஷப்படவேண்டும்.

———

மனைவி:—நீங்கள் வரவில்லை என்று கவலையுடன் இத்தனை நேரம் கண் விழித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தேன்.

புருஷன்:—வெகு அழகு! நீ தூங்க வேண்டுமே என்று இத்தனை நேரம் நான் அங்கே காத்துக்கொண்டிருந்தேன்.

———

ராமன்:—டம்ளர் ஏன் இவ்வளவு அசுத்தமாயிருக்கிறது?

பரிசாரகன்:—வீட்டில் இன்னும் ஒருவரும் காப்பி சாப்பிடவில்லை. அது சாப்பிட்டானவுடன்தான் தேய்த்து அலம்புவது வழக்கம்.

———

மனைவி:—உங்களுக்கு ஞாபகச் சக்தி அதிகமென்று நீங்கள் கூறிக்கொள்ளுவதுவழக்கமாயிற்றே?

புருஷன்:—ஆம்! நமது வாழ்வில் நடந்த சம்பவங்கள் ஒன்று விடாமல் எனக்கு நினைப்பிலிருக்கின்றன.

மனைவி:—பல வருடங்களுக்கு முன் நடந்ததுகூடவா?

புருஷன்:—ஆம்.

மனைவி:—அப்படியானல் கடைசித் தடவை எனக்குப் புடவை வாங்கியதும் நினைவிலிருக்கிறதா?

———

கோவிந்தன் தான் வேட்டைக்குச் சென்றிருந்தபோது ஒருபெரிய புலி அருகில் வந்துவிட்டதாயும் தானாவது புலியாவது இறந்தாகவேண்டுமென்ற நிலைமையேற்பட்டுவிட்டதாயும் கூறினான்.

அவன் நண்பன்:—நல்லவேளையாகப் புலி இறந்தது நம் அதிர்ஷ்டம்தான். இல்லாவிடில் இந்த அழகான புலித்தோல் நமக்கு அகப்பட்டிராது.

———

கதை எழுதுவதில் அதிக ஆவல்கொண்டபோதிலும் தகுந்த திறமையில்லாத ஒருவர் பத்திரிகாலயத்திற்கு வந்து ஆசிரியரைப் பார்க்க விரும்புவதாகத் தெரிவித்தார்.

கதவருகில் நிற்கும் சிறுவன்:—ஆசிரியர் வெளியே போயிருக்கிறார்.

வந்தவர்:—நான் உள்ளே வரும்போது ஜன்னல் வழியாக அவரைப் பார்த்தேனே?

பையன்:—அதற்கு முன் அவர் உங்களைப் பார்த்துவிட்டார்.

———

டாக்டர் படுக்கைக்குச் சென்றவுடன் வாயிற் கதவு இடிக்கப்பட்டது. அவர் உடனே எழுந்து கதவைத் திறந்து, அங்கு நின்றவரை என்ன வேண்டுமென்று கேட்டார்.

வந்தவர்:—என்னை நாய் கடித்துவிட்டது.

டாக்டர்:—நான் வியாதியஸ்தர்களைப் பார்க்கும் நேரம் இன்னதென்று போர்டில் எழுதியிருப்பது தெரியவில்லையா?

வந்தவர்:—எனக்குத் தெரியும். ஆனல் என்னைக்கடித்த அந்த நாய்க்குத் தெரியவில்லையே?

———



சென்னை விக்டோரியாப் பப்ளிக்ஹாலில் வருஷாந்தர கிறிஸ்மஸ் மாறுவேடப் பந்தயக் காக்ஷி நடந்தபோது எடுத்தபடம். பி. பி. பி.

நமது சிறு கதை.

# ராஜேச்வரி

(ஸ்ரீமதி அபயாம்பாள் எழுதியது.)

''அம்மா! நான் எவ்வளவு கேட்டாலும் என்னிடம் உண்மையைச் சொல்லமாட்டேனென்கிறாயே? நானும் எனக்கு நினைவு தெரிந்த நாள் முதல் எத்தனை விதமாய் கெஞ்சிக் கேட்டாலும், நீ குழந்தை; உன்னிடம் எதுவும் சொல்லக் கூடாது என்று சொல்லி ஏமாற்றி வருகிறாயே? இப்போதுகூட நானென்ன குழந்தையா? எனக்கு வயது 15-16 ஆகவில்லையா? எந்த விஷயத்தையும் கிரகிக்கவோ ரகசியமாய் வைக்கவோ சக்தியற்றவளா? அல்லது படிக்காத மூடமா? இன்று நீ என் சந்தேகத்தைத் தீர்த்தாலல்லது ஜலபானம்கூடச் செய்ய மாட்டேன்'' என்று அழுது கொண்டே சொன்னாள் ஓர் அழகிய பெண்மணி. கற்பகத்தம்மாள் தன் மகளைத் தழுவியணைத்து, அன்புடன் அவளைத் தடவி, 'என்செல்வமே, நீ எப்போதும்போல் விளையாட்டிலும் படிப்பிலும் உன போதைக்கழிக்காமல், இன்று ஏன் இப்படிப் பிடிவாதம் பிடிக்கிறாய்? நான் உனக்கு என்ன சொல்ல வேண்டுமென்கிறாய்?' என்றாள். 'ஆம் அம்மா! ஒன்றும் தெரியாதவளைப் போல் கேட்கிறாயே? நான் விளையாடிக்கொண்டிருந்த காலம்போதும்; இனியும் அப்படி இருக்க மாட்டேன்; இப்போதும் என்னை ஏமாற்றப்பார்க்காதே. உண்மையைச் சொல்லிவிடு. 'ராஜீ! என் தங்கமே! என்மனதில் புதைந்துகிடக்கும் துக்கத்தை எல்லாம் ஏனடி கிளப்புகிறாய்?' என்று சொல்லிக் கண்ணீர் வடித்தாள் கற்பகத்தம்மாள்.

ராஜி:—அம்மா! நீ தனியாயிருக்கும்போதெல்லாம் ஸதா அழுதுகொண்டேயிருப்பதையும் நான் வந்தவுடன் ஒன்றுமறியாதவளைப்போல் பாவனை செய்வதையும், தற்செயலாய் அநேகமுறை பார்த்திருக்கிறேன். அதன் காரணமென்ன? மேலும், அம்மா! என்னுடன் படிக்கும் சிறுமிகளெல்லாம் தங்கள் தந்தையைப்பற்றிப் பெருமையாய்ப் பேசிக்கொள்ளுகிறார்களே! என் தந்தை எங்கே? நாம் தனிமையாயிருக்கவேண்டிய காரணமென்ன? இதெல்லாம் கேட்டுத் தெரிந்துகொள்ள எனக்கு உரிமையில்லையா?

''அடி என்கண்ணே! நீகேட்கும் கேள்விகளெல்லாம் என் நெஞ்சைத் துளைக்கின்றனவே. உன் புத்தியும், குணமும், அழகும் நீ பிறந்த குலத்திற்குத் தகுந்தபடியே அமைந்திருக்கின்றன. உன் தந்தை உன்னையும் என்னையும் வெறுத் தொதுக்கிவிட்டாரடி'' என்று சொல்லிக் கோவென்று கதறி அழுதாள். தன் தாய் அழுவதைப் பார்த்துச் சகியாத ராஜி, தானும் அழ சற்றுப் பொறுந்து தன் துக்கத்தை ஆற்றிக்கொண்ட கற்பகத்தம்மாள், தன் மகளைத் தேற்றிச் சிறிதுநேரம் ரகசியமாய் பேசிக்கொண்டிருந்தாள். அதைக் கேட்டு, 'அம்மா! நான் உன் துக்கத்தைத் தீர்க்க வழி தேடாவிட்டால் நான் பிறந்ததனால் உனக்கென்ன பயன்!' என்றாள் ராஜி. 'என் கண்ணே! நீ எப்போதும்போல் என்னை விட்டுப் பிரியாமலிருந்தால் அதுதான் எனக்குப் பரம திருப்தி' என்றாள் தாயார். அந்த தினத்திலிருந்து நம் பெண்மணி ஆட்டுக் கூட்டத்திடையில் தவறி வளர்ந்த சிங்கக் குட்டியானது நீர் நிலையில் தன் உருவைக் கண்டு பிரமை தெளிந்ததைப்போல், புத்துயிர் பெற்று விளங்கினாள்.

* * * *

முல்லைவனம் ஜமீன்தாரின் அழகிய மாளிகையில் ஓர்நாள் விசேஷமான விருந்திற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. ஆக்ஸ்போர்டில் படித்து உயர்தரப் பரீக்ஷையில் முதன்மையாய்த் தேறி, அநேக பரிசுகள் பெற்று, இந்தியாவுக்குத் திரும்பிய ஜமீன்தாரின் சகோதரியின் குமாரன் அன்று நேராய் முல்லைவனம் வருவதாய்த் தந்தி வந்திருந்தது. குறித்த நேரத்தில் சத்யநாதன் மோட்டாரில் வந்திறங்கினான். ஜமீன்தார் ராகவப் பிரபுவும் அவர் மனைவி கனகவல்லியும் அவனை அன்புடன் வரவேற்று உபசரித்தார்கள். சத்யநாதனும் தன் மாமன் மாமியை வணங்கி, தான் மேல்நாடு சென்று வந்ததையும், அங்குள்ள நவீன நாகரீகங்களையும் விவரமாய் எடுத்துரைத்தான்; யாவரும் கேட்டு ஆனந்தித்தார்கள். ராகவப் பிரபு, தன் மருமகனின் அழகையும், குணத்தையும் கல்வியையும் கண்டு மனம் பூரித்தார். ஆனால் கனகவல்லியோ வெனில், இந்த ஜமீனைத் தனக்குக் குழந்தையில்லாதபடியால் தங்களுக்குப்பின் தன் சகோதரன் தாமோதரனுக்கு உரிமையாக்க எண்ணியிருந்த எண்ணத்தில் மண் விழுந்து போனதையும், தன் புருஷர் அவருடைய மருமகனிடம் அன்புடனிருப்பதையும் கண்டு, பொறாமை என்னும் தீயினால் வெதும்பப் பெற்றவளாய் சத்யநாதனிடம்



ரக்ஷண்ய சேனையின் தலைவர் ஜெனரல் ஹிக்கின்ஸும் அவர் மனைவியும் சென்னைக்கு விஜயம் செய்தபோது செண்ட்ரல் ஸ்டேஷனில் வரவேற்கப்பட்ட காக்ஷி. பி. என். ஏ.

கடுமையான குரோதம் கொண்டவளானாள்.

* * * *

'லீலா, உன் முகம் ஏன் வாடியிருக்கிறது? பெண்ணே! என் மாமி உன்னை ஏதாவது கடுமையாய் நடத்துகிறாளா? என்ன என்னிடம் உண்மையைச் சொல்லக்கூடாதா?' என்றான் சத்யநாதன். லீலா என்ற அந்த அழகிய பெண்மணி, 'ஐயா, நான் வேலைக்காரிதானே? என்னை எப்படி நடத்தினாலும் அது அவர்கள் கருணை; தாங்கள் ஏழையாகிய என் மீது கருணைகூர்ந்து இவ்வளவு அன்புடன் விசாரித்ததற்கு நான் மிகவும் நன்றியுள்ளவளாயிருக்கிறேன்' என்றாள்.

சத்ய:—பெண்மணீ! நான் வந்ததுமுதல் உன்னைக் கவனித்து வந்தேன். இவ்விடம் நீ சந்தோஷமாயிருக்கவில்லையென்றும் ஏதோமனோவேதனையால் பீடிக்கப்பட்டிருப்பதாயும், என் புத்திக்குப்படுகிறது; அது வாஸ்தவம் தானே? மேலும், உனக்குத் தாய்தந்தையர் ஒருவரும் இல்லையா? உன்னைப் பணிப்பெண்ணாயனுப்ப அவர்களுக்கு மனம் வந்ததா?

லீலா:—ஐயா, தாங்கள் என் மீது கொண்ட இரக்கத்தினால் இவ்வாறு பேசுவதாகத் தெரிகிறது. யாவும் நம் வினைப்படித் தானே நடக்கும்? என் தாய் தந்தையரை உயிருடன் பிரிந்து விட்டேன்; இனி, கடவுள் மனம் வைத்தாலல்லது ஒன்று சேரமுடியாது.

சத்ய:—அப்படியா? லீலா, நீ சொல்வதைக் கேட்க மனம் வருந்துகிறது. ஓர் பெரிய மாளிகைக்கு எஜமானியாயிருக்க வேண்டிய எல்லாச் சிறப்பும் அமைந்த நீ, கேவலம் ஓர் தாதியாயிருக்கத் தெய்வமும்பொறுக்காது! உன் மனக்குறைகளை என்னிடம் சொன்னால் என்னாலான பரிகாரம் செய்யத் தடையில்லை; நீ என்னைப்பற்றித் தவறாய் நினைக்காதே.

லீலா:—ஐயா, எஜமானியாயிருப்பதும் வேலைக்காரியாயிருப்பதும் நம் செயலல்ல. கடவுள் செயல். நான் தங்களிடம் சொல்லக்கூடியது ஒன்றுமில்லை. அதோ தங்கள் மாமி வருகிறார்கள். அவர் நம்மைப்பற்றி என்ன நினைப்பார்களோ? நான் போய் வருகிறேன் என்று சொல்லி வேகமாகப் போய்விட்டாள்.......

* * * *

'என்னடி? லீலி. நான் எத்தனை முறை கேட்டாலும் சரியான பதில் சொல்லாமல் லீலிக்குக் கண்ணீர் நெற்றியிலே எனபதுபோல் ஸதா கண்ணீரை ஓடவிடுகிறாயே?' என்று அதட்டினாள் கனகவல்லி.

லீலா:—அம்மா! நான் என்ன சொல்லவேண்டும்?

கனக:—என்னடி! நான் சொல்வது உனக்குப் புரியவில்லையா? இன்று சாயங்காலம் தோட்டத்தில் நீயும் சத்யநாதனும் என்ன பேசிக் கொண்டிருந்தீர்கள்? உண்மையைச சொல்.

லீலா:—அம்மா! நான் புஷ்பம கட்டிக்கொண்டிருக்கும்போது அங்கு தற்செயலாய் வந்த அவர் என்னைப் பார்த்து, 'நீ யார்! உனக்குத் தாய் தந்தையிருக்கிறார்களா?' என்று கேட்டார். நான் அதற்குப் பதில் சொல்லிவிட்டு வந்துவிட்டேன் கடவுளறிய இதுதான் நடந்த உண்மை. இதைத் தாங்கள் தவறாய் எண்ணிவிட்டீர்கள் போலும்.

கனக:—ஆமா! உன் வாக்கு அரிச்சந்திரன வாக்குத்தான். நானும் அரைமணி நேரம் கவனித்தேன்; பேச்சு முடியவில்லை; எனக்கு வெகு சுருக்கமாயும், ஒழுங்காயும பதில் சொல்லிவிட்டாய்; இனி, நீ இவ்வீட்டிலிருக்கத் தகுதியில்லை; உடனே நடந்துவிடு.

(1533-ம் பக்கம் பார்க்க.)

# தென்னிந்தியப் பிரமுகர்கள்

## ஸ்ரீமான் சுப்பிரமணிய பாரதியார்

(1882—1921)

கே. எஸ். ஆர்.

ஸ்ரீமான் சி. சுப்பிரமணிய பாரதியார் 1882-ம் வருஷம் டிசம்பர் மாதத்தில், எட்டையபுரத்தில் வேதமோதும் அந்தணர் குலத்தில் சின்னஸாமிஐயர் என்பாருக்கு ஜேஷ்ட புத்திரராகப் பிறந்தார். சின்னசாமி ஐயர் எட்டையபுரத்தில் சமஸ்தான வித்துவானாகவும் உத்யோகஸ்தராகவுமிருந்து திருநெல்வேலி ஜில்லாவில் மிகுந்த கியாதிபெற்றிருந்தார். இவருக்குத் தமிழில் இருந்த பாண்டித்தியம் மிகவும் அதிசயிக்கத்தக்கது. இவருக்குத்தர்க்க சாஸ்திரத்திலும் நல்ல ஞானமிருந்தது. இவர் பொது ஜன நலத்திற்காகச் சில காரியங்கள் செய்ய முன்வந்தபோது இவரை ஒருவரும் சரிவர ஆதரிக்காதபடியால், இவருக்குத்திரவிய நஷ்டமதிகமேற்பட்டது. பாரதியாரின் தாயார் அவரது ஐந்தாம் பிராயத்திலேயே காலகதியுற்றனர். அன்றுமுதல், இவரைப்பற்றின பொறுப்பு முழுமையும் இவரது தந்தையார்மீதே விழுந்தது. பாரதியாரும் தம் தந்தையாரின் அரிய குணங்களைக் கிரஹித்துக் கொண்டார். ஐந்தாம வயதிலேயே இவருக்கு நம் ப்ராசீனக்கொள்கைகளுக்கேற்ப அக்ஷராப்பியாசம் செய்விக்கப்பட்டது.

பாரதியாரது தகப்பனாருக்குத் தமிழில் விசேஷ ஞானமிருந்ததால், பாரதியாரும் வெகு சுலபமாகவே அப்பாஷையில் பயில வாரம்பித்தார்; இவர் தமது ஏழாவது ஆண்டு முதற்கொண்டே காதிற்கு இன்பமான பாக்களைச் சிறிதேனும் தொந்தரவின்றி, வெகு சுலபமாகவே எழுதி வருவாராயினர். இதைக் கண்ட வித்துவான்களில்அநேகர் பாரதியாரின் தகப்பனாரை மிகப் புகழ்ந்திருக்கின்றனர்களாம். இதன் பின்னர், இவர் தமது ஒன்பதாவது வயது வரையிலும், பிறரால் கொடுக்கப்பட்ட ஸமஸ்யைகள், வார்த்தைகள் முதலியவற்றைக் கொண்டு, யாவரும் அதிசயிக்கத்தக்க விதமாக, அநேகம் கவிகளைப் பூர்த்தி பண்ணியிருக்கிறாராம்.

இவர் இம்மாதிரித் தமது இளம் பிராயத்திலேயே பாடியது கற்றறிந்த மேதாவிகளை வியக்கவும் களிக்கவும் செய்தது. இவ்விஷயம் எளிதில் நம்பக் கூடியதல்லாமலிருந்தபோதிலும்உண்மையானதேயாகும். இவருக்கு இந்தக் கவிதாசக்தி



ஸ்ரீமான் சி. சுப்ரமண்ய பாரதி.

பிறவியிலிருந்தே ஏற்பட்டிருக்கவேண்டுமென்று நாம் கொள்ளலாம். இவருள்ளிருந்தவொரு தெய்வீகத் தன்மையே இவரது கவிகளுக்குத் தூண்டுகோலாகும். இவர் தமது பதினோராவது வயதில் புலவர்கள் நிறைந்ததொரு சபையில், அநேகம் பாக்களைக் காலதாமதமின்றிக்கொடுக்கப்பட்ட சில அடிகளைக்கொண்டு இயற்றவே, சபையையலங்கரித்தோரனைவரும் மனமகிழ்ந்து, இவரது திறமையை மிகவும் பாராட்டி, இவருக்கு "பாரதியார்" என்ற புகழ்ப் பட்டத்தையளித்துக் கௌரவித்தனர். இது முதற்கொண்டு, இவரது பெயர் இப்புவியில் பாரதியார் என்றே நிலைநின்று வருகிறது. இவரது வித்தியாப்பியாசம் ஆங்கிலப் பள்ளிக்கூடங்களில் நடைபெற்றது. இவர் தனியாகப் புலவர்களிடமிருந்து தமிழில் அப்பியாசம் பெறவில்லை. தமிழ்ப் பாஷையில் இவருக்குண்டான எளிய நடையும் சுலபமான நீதியும் பிறருதவியின்றி, இவருக்கு வாய்த்தன. இவரது தந்தையாரும் இவரது வித்யா விஷயத்திலேயே கண்ணாயிருந்து வந்தார். அவர் தம்மைந்தனது வாக் சாதுர்யத்தைக்கண்டு, இவருக்கு ஆதியிலிருந்து கம்பர், தாயுமானவர், திருவள்ளுவர் முதலியோரது காவ்யங்களில் பயிற்சி செய்து வைத்தார். இவரது தகப்பனாரும் இவரது 15-வது வயதில் இறந்தனர். இம்மாதிரியாகப் பிதாவின் மரணம் வரையில் இவர் எட்டையபுரத்திலிருந்து வந்தார்.

இவர் தம் தந்தையாரின் மரணத்தின் பயனாகச் சிலகாலத்தைப் புண்ய க்ஷேத்திரமான காசியில் கழித்தனர். எட்டையபுரம் ஜமீன்தார் வே

ண்டு கோளுக்கிசைந்து திரும்பவும் தம்மிடம் இவர் வந்து சேர்ந்தார். இவர் திருநெல்வேலி ஹிந்து காலேஜில் சேர்ந்து சுமார் 3 வருஷகாலம் படித்தார். இச்சமயங்களில் இவருக்கும் இவரிடம் பொறாமையால் அசூயை கொண்ட சில தமிழ்ப் பண்டிதர்களுக்கும் அநேகம் வாக்கு வாதங்கள் ஏற்பட்டன. சில புலவர்கள், ''பாரதியார் சின்னப் பயல்'' என்றும் தாங்கள் தான் அதிமேதாவிகள் என்றும் கொண்டிருந்த இறுமாப்பை, பாரதியார் அறவே அழித்தார். பாரதியாரின் தெய்வீகத் தன்மையையுணராது சிலர் கொண்டிருந்த அகம்பாவத்தை, இவர் சுலபமாகவே போக்கினார். 1901-ல் இவர் காசிவாசியாகவிருந்து அலஹாபாத் சர்வகலாசாலையில, புதிதாக சம்ஸ்கிருதபாஷை யெடுத்துக்கொண்டு பிரவேசப் பரீக்ஷையில் தோன்றி முதல் வகுப்பில் தேறினார். திரும்பவும் இவர் எட்டையபுரத்திற்குச் சில அசௌகர்யங்கள் பற்றி வந்து சேர்ந்தார். இங்கு ஜமீந்தாரின் நேசத்திற்குப் பாத்திராகி, தமக்கு அவரிடமிருந்து கிடைக்கும் சொற்பவருமானத்தைக் கொண்டு1904-மவருஷம் வரையில் காலத்தைப் போக்கினார். இவருக்கு இதற்கு மேல் கலாசாலையிலிருந்து படிப்பது கஷ்டமாயிற்று. ஒரு சமயம் ஜமீந்தாரும் மற்றும் சில புலவர்களும் காவடிச்சிந்து அண்ணாமலைக் கவிராயர்போல் பாரதியார், சிந்துகவிகள் முதலியன இயற்றுவது சிரமமானது என்றபோது, பாரதியார் தமது இல்லத்திற்குச்சென்று அன்றையதினமே வெகு விரைவில் சிந்துகள் எழுதிக் கொடுத்து எல்லோராலும் போற்றப்பட்டார். இவர் ஷெல்லி, கீட்ஸ், முதலிய ஆங்கிலக் கவிகளின் பாடல்களையும் படித்துச் சந்தோஷப்படுவார்.

1904-ல் எட்டையபுரத்தில் சில மனக்கிலேசங்கள் பற்றி இருக்கச் சம்மதியாமல், மதுரைக்குச் சென்று சேதுபதி ஹைஸ்கூலில் மூன்று மாதகாலம் உபாத்தியாயராக விருந்தார். இதன் பின்னர் சென்னைக்கு வந்து ஸ்ரீமான் ஜீ சுப்பிரமணிய ஐயர் கீழ் ''சுதேசமித்திரன்'' உதவியாசிரியர்களுள் ஒருவராக விருந்தார். ஆனால் இவர் இப்பதவியில் ஸ்திரமாகவிருக்காமல் சில சிநேகர்களின வேண்டுகோளுக்கிணங்கி ''இந்தியா'' என்றவொரு தமிழ் வாரப் பதிப்பின் ஆசிரியர் பதவியையேற்றுக்கொண்டார். அக்காலத்திலதான் பாரதியார் தேசீய விஷயங்களில் தலையிட்டுக்கொண்டார். இவர் தம் தமிழ்நாட்டில் தேசபக்தியைப்பற்றியும் தேசத் தொண்டைப்பற்றியும் ஆர்வத்துடன் எழுதி எல்லோருடைய உள்ளததிலும் ராஜீய ஞானத்தை உண்டுபண்ணினார். இவ்வாறு பாரதத்தாயின சேவைக்காக இவர் வீரரசம், தேசீய உணர்ச்சி முதலியவற்றுடன் கூடிய ''ஜன்மபூமி'' முதலான அநேகம் தமிழ்ப்பாடல்களை எழுதிவர வாரம்பித்தார். இவரது பாடல்களைப்பாடஎல்லோரும் முன் வந்தனர். ஸ்ரீமான் சிதம்பரம் பிள்ளையவர்களைச் சிறையிட்ட காலத்தில் பாரதியாருடைய கோபம் பொங்கியெழுந்தது.

தேசீய நிலைமையும் இவரது சுதந்திரப்பாடல்களுடன் பிரகாசித்தது. அச்சமயம் துரைத்தனத்தார் அநேகரைக் கைது செய்தனர். 1908-ல் பாரதியார் நிகழ்ந்துவரும் சம்பவங்களைக் கண்டு, காராக்கிரஹம் செல்ல இஷ்டமில்லாதவராய், புதுச்சேரியில் அடைக்கலம் புகுந்தார். அங்கிவரிருந்த பத்து வருஷமும் இவர் மிகவும் கஷ்டதசையிலிருந்தார். இவர் இவ்வாறு எல்லாம் வல்ல கடவுளால் சோதிக்கப்பட்டு வருகையில அநேகம் பாடல்களையும், கற்பனைக் கதைகளையும் நற்புத்தி புகட்டும் நற்போதனைகளையும் எழுதினார். இவர், ''சுதேசமித்திரன்'' பத்திரிகைக்குக் ''காளிதாசன்'' ''சக்திதாஸன்'' என்ற புனைப்பெயர்களுடன் அநேக வியாஸங்கள் எழுதிவந்தார். புதுச்சேரி வாசம் இவருக்கு ஒரு விதமாயினும் சுகம் விளைவிக்காமற்போனபோதிலும், நம் தாய்நாட்டிற்கு மிகவும் லாபகரமாகவே இருந்தது. புதுச்சேரியில் தான விழுமிய கருத்துகளுடனும், இன்ப ரசத்துடனும் ததும்பும் அநேகம் கவிகளும், தாய்நாட்டின் ஆசையை எல்லோருடைய மனதிலும் உன்னத ஸ்தானத்தில் நிலைநிறுத்தும் ரமணீயமான சுதேச கீதங்களும் இவரால் வரையப்பட்டன. இவர்தான் முதன் முதல் தமது கவிதையின் மூலம் இந்நாட்டில் சுதந்திரச் சங்கை கணீரென ஊதி, பாரதத்தாயின் சேவைக்காகத் தூங்குபவர்களையும் தட்டியெழுப்பினவர். தற்காலத்தில் இவரது பாடல்கள் எலலாக் கிராஹங்களிலுமே பாடப்பட்டு வருகின்றன. இவரெழுதியவையனைத்தும் பிரசுரப்படுத்தப்படவில்லை. 1918-ல் இவர் புதுச்சேரியிலிருந்து வெளிவந்தார் உடனே, இவர் கூடலூரில் கைதியாக்கப்பட்டார். இவர் மீது வழக்குத் தொடரக் காரணங்கள் அமையாமையால் இவரை விடுதலை செய்தனர். உடனே, இவர் தமது மனைவி மக்களுடன் தமதூருக்குச் சென்றார். இவருக்குத் தேகவலிமை மிகவும் குன்றியும், தோற்றம் மாறியும், மனோவியாகூலமும் அதிகரித்து இருந்தது.

1920-ல் இவர் மறுபடியும் சென்னைமா நகருக்கு வந்து, ஸ்ரீமான் ஏ ரங்கசாமி ஐயங்கார் கீழ் சுதேசமித்திரனில் ஒரு உதவியாசிரியராக அமர்ந்தார். ஸ்ரீமான் அய்யங்காரும் பாரதியார் இயற்றியவற்றுள் எவ்வளவு சாத்தியமோ அவ்வளவையும் ''சுதேசமித்திரன்'' பத்திரிகையில் வெளியிட்டு, பாரதியாரை ஆகரித்து வந்தார். ஆனால் வெகு சீக்கிரத்திலேயே, 1921-ம் வருஷம் செப்டம்பர் மாதம் 11-ம் தேதியன்று சென்னை திருவல்லிக்கேணியில், பாரதியார் தமது 39-வது பிராயத்தில் தேகவியோகமானார்.

இவரது மரணம் தமிழகத்திற்கும் நம் தேசத்திற்கும் கணக்கிடவியலாத நஷ்டத்தை விளைவித்தது. இவர் நம் தமிழணங்கிற்குத் தொண்டு புரிந்து விளங்கிய ஒரு சிறந்த தேசபக்தர். தேசாபிமானத்தினால் இவர் இயற்றிய புஸ்தகங்களைப்பற்றி இங்கு விவரிப்பது முடியாத காரியமாகும்; அவைகளை நேரில் படிக்கவாவது, கேட்கவாவது வேண்டும். பாரதியார் போன்றவர்கள் இனிமேல் நம் தமிழ்நாட்டின் தவப்பயனாகத் தான் தோன்றவேண்டும்.







# சங்கீதமும் நாடகமும்



## நாடகமேடை நினைவுகள்

[காபிரைட்.]

[ராவ்பகதூர் ப. சம்பந்த முதலியார், பி.எ.பி.எல். எழுதியது.]

இந்நாடகத்தில் அர்ஜுனன் வேஷம் ஆடுவதில் ஒரு முக்கியமான கட்டம்உண்டு; அதாவது சுபத்திரை தன்னை வசப்படுத்த வயிற்றுநோயால் வருந்துவது போல் பாசாங்கு செய்தாள் என்று அர்ஜுனன் அறிந்தவுடன், அவள் பக்கம் திரும்பி 'சுபத்திரை!' என்று ஒரு வார்த்தை கூறுகிருன். இந்த வார்த்தையை வெறும் கோபத்துடனும், சொல்லக் கூடாது; வெறுங் காதலுடனும் சொல்லக் கூடாது; வெறும் வருத்தத்துடனும் சொல்லக்கூடாது. சுபத்திரை தன்னை மோசம் செய்தாளே என்னும் கோபம் கொஞ்சம் இருக்க வேண்டியது தான்; அவ்வாறு தன்னை மோசம் செய்தவள் தன்னுருயிர்க் காதலியென்பதையும் மறக்கக்கூடாது, எப்படியிருந்தபோதிலும் இதனால பிறகு ஸ்ரீகிருஷ்ணபகவானுடன் போர் புரிய நேரிடுமே, என்னும் துக்கத்தையும் காட்ட வேண்டும். இந்த மூன்று ரசங்களையும் அந்த ஒரு பதத்தை உச்சரிப்பதில் அடக்கி நடிக்க வேண்டும். நான் இதை எழுதிய போது இந்த ரஸப்பூர்த்தியை அறிந்தவனன்று; ஏதோ அப்படி எழுதவேண்டுமென்று தோன்றி எழுதிவிட்டேன். முதன் முறை இந்நாடகத்தை சென்னையில் நான் நடித்தபொழுது, ''சுபத்திரை!'' என்று நான் திரும்பி அவளைப் பார்த்தபொழுது, சபையோர் கரகோஷம் செய்து சந்தோஷித்தபொழுதே, அதன் மஹிமையை அறிந்தேன்! சிபி ஒருவன் ஏதோ தன்மனம் போனபடி ஏதோ சிலையைச் செதுக்கிவிடுகிருன், மற்றவர்கள் அதைப்பார்த்து, அதிலுள்ள ஓர் விசித்திரமான வேலையைக் கண்டு சந்தோஷிக்கும் போதுதான், அவனுக்கும் அதன் அழகு தெரிகிறது! இந்த அர்ஜுனவேடம் நான் பன்முறை பூண்டு, பலநாடக மேடைகளின்மீது ஆடியிருக்கிறேன்; இது நான் முன்பே கூறியபடிச் சிறியபாகம், அர்ஜுனன் ரங்கத்தில் தோன்றும் காலம்முதல் 10 நிமிஷத்திற்கெல்லாம் நாடகம் முடிந்து போகிறது. ஆயினும் இந்த ஒருபதத்தை சரியாக நடிப்பதற்காக, இவ்வளவு வயதாகியும், இந்த வேடம் பூண விரும்புகிறேன்.

இதை ஒரு 'கட்டம்' என்று நான் கூறியதற்குக் காரணம், இவ்வேடம் பூணும் ஒவ்வொரு ஆக்டரும் இக்காட்சியில் இப்பதத்தைச் சரியாகச் சொல்லுகிருரை இல்லையா என்று பார்க்கவேண்டி



'பெடிட்லிசின்' என்ற சிறுவர் பத்திரிகையின் ஆசிரியரான 14-வயதுள்ள பியரிபோர்க்சன் என்ற பிரெஞ்சு வாலிபன் லண்டன் லார்டு மேயரைத் தன் பத்திரிகைக்காகப் பேட்டிகண்ட காக்ஷி.

இ. என். பி.

யிருப்பதனால்தான். இதைச் சரியாகச் சொல்லிச் சபையோரின் மனதைச் சந்தோஷப்படுத்தினல் ஆச்சுது, இல்லாவிட்டால், இப்பாத்திரத்தை அந்த வேஷதாரி கொலை செய்தான் என்றே கூறவேண்டும். இதைப்பற்றி நான் இவ்வளவு விரிவாக எழுதியதற்குக் காரணம், இந்நாடகமானது மிகவும் அதிகமாக ஆமெடூர் சபைகளினுலும், நாடகக் கம்பெனிகளினுலும் பன்முறை ஆடப்பட்டு, இந்த இடத்தில் அந்த வேஷதாரி ரசாபாசம் செய்ததை நான் பன்முறை கண்டு வருந்தியிருக்கிறேன்; ஆகவே, இனி மேலாவது எனது இந்த நாடகத்தில் அர்ஜுனன் வேஷந் தரிக்க விரும்புவோர் இதைக் கவனித்து இந்தக் கட்டத்தில் தக்கபடி நடிப்பார்களாக.

நாடகம் முடிந்தக்ஷணமே, என் டாக்டர் உள்ளே வந்து உடனே என்னைக் கம்பளிப் போர்வை ஒன்றைப் போர்த்துக்கொள்ளச் சொல்லி, 'வீட்டிற்குப் போய் வேஷத்தைக் கழுவிப் படுத்துக்கொள்; இங்கே வெந்நீர்கிடைக்காது!' என்று சொல்லி, நான் வந்த வண்டியில் ஏற்றி அனுப்பிவிட்டார். என்சொந்த பந்துக்களும் எனக்காக அவ்வளவு அன்பு பாராட்டுவார்களோ என்னவோ?

நான் வீட்டிற்கு வந்து கொஞ்சநேரம் இளைப்பாறிவிட்டு, வெந்நீர் கொண்டுவாச் சொல்லி, என் முகத்திலிருந்த வர்ணத்தைக் கழுவிக்கொண்டிருந்தபொழுது, நடந்த ஒரு சிறு வேடிக்கையை இங்கு எழுதுகிறேன். நோயுடன் இருந்த எனக்கு, வேண்டிய வேலைகளைச் செய்துகொண்டு என் பக்கத்திலேயே இருக்கும்படி, எனது பால்ய நண்பர் வி. வி. ஸ்ரீனிவாச ஐயங்கார், பத்து பன்னிரண்டு வயதுள்ள ஒரு யாழ்ப்பாணத்துப் பையனை ஏற்பாடு செய்திருந்தார். அவன் நான் வந்தது முதல் படுத்த படுக்கையாய் ஜ்வரத்திலிருந்ததைக் கண்டவன்; நான் முகத்திலிருந்த வர்ணத்தைக் கழுவிக்கொண்டிருந்ததைப் பார்த்து ஆச்சரியப்பட்டவனாய், ''எசமாங்கூடவேஷமா பொட்டுச்சி!'' என்று, தன் கண் விழிமலரக் கேட்டான்! படுக்கையை விட்டு எழுந்திராத இந்த ஆசாமி எப்படி நாடகத்தில் ஆடினான் என்று ஆச்சரியப்பட்டான் என்பதுதிண்ணம். இவன் ஆச்சரியப்பட்டதுமன்றி, அந்நாடகத்தில் வந்திருந்தவர்களிற் பலர், (என்னை நேராக அறிந்த சிலர் தவிர) நான் ஆடவில்லையென்று நினைத்தனர்களாம். அதற்கு ஒரு திர்ஷ்டாந்தம் இங்கு எழுதுகிறேன். (தொடரும்)

# ஸங்கீதம்.



(ஸ்ரீமான் வி. ஆர். ஸ்ரீனிவாஸய்யங்கார், பி. ஏ. எழுதியது.)

பல்லவி

ஸுஜனஜீவன! ஸுகுணபூஷண! ராம!

அனுபல்லவி

புஜகபூஷணார்ச்சித! புதஜனாவனா!
த்மஜவந்தித! ச்ரிதசந்தன!
தசதுரங்க! மாமவ.

சரணம்

சாருநேத்ர! ஸ்ரீகளத்ர! ஸ்ரீரம்யகாத்ர!
தாரகநாம ஸு சரித்ர! தசரதபுத்ர!
தாரகாதிபானன! தர்மபாலக!
தாரய ரகுவர! நிர்மல! த்யாகராஜஸன்னுத!

II

| | |
|---|---|
| ராம! ஸுஜன ஜீவன | —ராம! ஸாதுக்களுக்கு உயிர் நிலையானவரே! |
| ஸுகுண பூஷண! | —அனந்த கல்யாண குணங்களால் அலங்கரிக்கப்பட்டவனே! |
| புஜக பூஷணார்ச்சித | —ஸர்ப்பங்களை ஆபரணமாகத் தரிக்கும் பரமசிவனால் பூஜிக்கப்பட்டவரே! |
| புதஜன அவன! | —ஞானிகளை ரக்ஷிப்பவரே! |
| ஆத்மஜ வந்தித! | —ஸ்வயம்பூவான ப்ரஹ்மாவால் வணங்கப்பட்டவரே! |
| ச்ரித சந்தன! | —அண்டினவர் வேண்டுவதையெல்லாம் சந்தனமாத்தைப்போல் கொடுப்பவரே! |
| தசதுரங்க! மாம் அவ! | —கருடவாஹன! என்னை ரக்ஷியும். |
| சாருநேத்ர! ஸ்ரீகளத்ர! ஸ்ரீரம்ய காத்ர! | —அழகிய கண்களையுடையவரே! லக்ஷ்மீபதி! திவ்யமங்கள விக்ரஹத்துடன் விளங்குகிறவனே! |
| தாரகநாம! ஸுசரித்ர! தசரதபுத்ர! | —ஸம்ஸாரக் கடலைத் தாண்டச்செய்யும் திவ்யநாமங்களுடையவனே! மங்களகரமான சரித்ரமுள்ளவனே! சக்ரவர்த்திதிருமகனே! |
| தாரகாதிப ஆனன! தர்மபாலக! | —நக்ஷத்ரங்களுக்கு அரசனான சந்த்ரனைப்போன்ற முகத்தையுடையவனே! தர்மத்தை ரக்ஷிக்கிறவனே! |
| ரகுவர! நிர்மல த்யாகராஜஸன்னுத! தாரய | —ரகுச்ரேஷ்ட! பரம சுத்தனான த்யாகராஜனால் துதிக்கப்பட்டவனே! கரையேற்றுவியும். |

III

ஸ்வாமிகள் ஸமஸ்கிருதத்தில் பாடின கீர்த்தனங்களில் இது ஒன்று. காலமுறையைப்பற்றிக் கீர்த்தனங்களை ஒழுங்குபடுத்தும்பொழுது, சுத்த ஸம்ஸ்கிருதம், ஸம்ஸ்கிருதம் அதிகமாகவும் தெலுங்கு குறைவாகவும் இருப்பவை, ஸம்ஸ்கிருதம் குறைவாகவும் தெலுங்கு அதிகமாகவும் இருப்பவை, சுத்த தெலுங்கென்று பிரிவு படும்.

ஸுஜன ஜீவன:—"நிவாஸ விருக்ஷ: ஸாதூனாம்" (கல்லோரான பக்ஷிகள் தங்கும் மஹாவிருக்ஷமே) யென்ற வால்மீகியின் வசனம் ப்ரமாணம். பகவானே பக்தர்களுக்கு ஆத்மாவென்றதை 'நினு பாஸி' முதலிய கீர்த்தனங்களில் காண்க.

ஸுகுணபூஷண:—பகவத்குணங்களின் மஹிமையைப்பற்றி ருக்மிணிதேவி கண்ணனுக்கெழுதின முதலாவது ச்லோகத்தில் காண்க.

புஜகபூஷணார்ச்சித:—ஸ்வாமிகள் ஸ்ரீராமனே பரப்ரஹ்மமென்றும் த்ரிமூர்த்திகளும் ராமனைப் பூஜித்தனரென்றும் பல கீர்த்தனங்களில் வெளியிட்டிருப்பதை ஒப்புக்கொள்ளாதவர்களுக்கு இது ஒரு ப்ரமாணமாகும். பலவிடங்களில் "த்யாகராஜனால் போற்றப்பட்ட" வென்றதற்கு பரமசிவனென்றே அர்த்தங்கொள்ளும். 'ஸார்வபௌம' வென்ற கீர்த்தனத்தில் 'ரமாபதி வந்த்ய—லக்ஷ்மீபதியால் போற்றப்பட்டவனே—" யென்றதைக் கவனிக்கவும்.

சந்தன:—தேவலோகத்திலுள்ள திவ்ய விருக்ஷங்களில் ஒன்று. அண்டினவர்கள் வேண்டினதைக் கொடுக்கும்.

ஸ்ரீரம்யகாத்ர:—'மரகரா' 'ஸொகஸு ஜூட்', 'பஜன சேயராதா', 'மேருஸமான' முதலிய கீர்த்தனங்களைப் பார்க்க.

தாரகநாம:—'சிந்திஸ்துன்னாடே' யென்ற கீர்த்தனத்தைப் பார்க்க. 'பவஜலதிகதானு' மென்ற குலசேகராழ்வாரின் முகுந்தமாலை ச்லோகத்தைப் பார்க்கவும். (ஸம்ஸாரமென்ற ஸமுத்ரம்; ஸுக துக்கமென்ற புயல்காற்றுகள்; இந்த்ரியங்களால் அனுபவிக்கப்படும் விஷயங்களே மலைபோன்ற கொந்தளிக்கும் அலைகள்; ஜீவகோடிகள் இந்த ஸமுத்ரத்தில் மூழ்கிக் கஷ்டப்படுகின்றன. பெண்டு பிள்ளை பந்து பரிவாரங்களென்ற பெரிய சுமைகளைச் சுமந்துகொண்டு நீந்துகிறார்கள். அப்படிப் பட்டவர்களுக்கு பகவானென்ற கப்பலே கதி. வேறில்லை.)

தர்ம பாலக:—ராமோ விக்ரஹவான் தர்ம:=(தர்மமே ராமனாக உருவெடுத்து வந்தது)—. தர்மஸ்ய ப்ரபு: அச்சுத: (அச்சுதனே தர்மத்திற்கு அதிகாரி.)

நிர்மல:—களங்கமற்ற மனதுடன் ஸ்தோத்ரம் செய்வதைக் குறிப்பிடுகிறார். 'துளஸீபில்வ' மென்ற கீர்த்தனத்தில் 'நிருபாதிகுடை அர்ச்சின்த்ஸு=ப்ரகிருதியாலுண்டான தேஹத்தின் தோஷங்களால் பற்றப்படாமல், அவைகளுக்குப் புறம்பாக நின்று விலக்ஷணனாய் கேவலம் ஆத்ம ஸ்வரூபத்துடன் பூஜை செய்யும்' என்றதைக் கவனிக்கவும்.

கமாஸ் ரூபகம்

பல்லவி

| | | | | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| ஸு | ஜ | ன | ஜீ | வ | ன | ,, | ரா | ம | ஸு | கு | ண | பூ | ஷ | ண | , | ரா | ம |
| ம | க | ஸ | கா | க | மா | ம | பா | பா | ப | த | ப | நீ | தா | பா | பா | ஸா | பா |

அனுபல்லவி

| | | | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| பு | ஜ | க | பூ | ஷ | ணார்ச் | சி | த | பு | த | ஜ | ன | வ | னாத் | ,, | ,, | ,, |
| நீ | த | நி | ஸா | நி | ஸாஸா | ஸ | ஸா | ஸ | ம | க | ஸா | நி | தநிஸ | நிநித | தபப | பமா |

| | | | | | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| ம | ஜ | வந் | தி | த | ச்ரி | த | சந் | த | ன | த | ச | து | ரங் | க | மா | ,, | ம | வ |
| ப | நி | ஸா | நி | த | நி | ஸ | நீ | நி | த | ப | த | ப | நீ | த | பா | ம | ஸா | பா |

சரணம்

| | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| சா | ரு | நேத் | ர | ஸ்ரீ | க | ளத் | ர | ஸ்ரீ | ரம் | ய | காத் | ர | ,, |
| கா | ம | பா | த | தநிஸா | நி | தப | ம | பதப | மா | க | ரீக | மா | மா |

| | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| தா | ர | க | நா | ம | ஸு | ச | ரித் | ர | த | ச | ர | த | புத் | ர |
| பா | ப | ப | பதா | த | ஸ | நீத | பா | ம | ப | ப | த | மாக | ரீக | மா |

(இதற்கு மேல் அனுபல்லவியைப் போன்றது.)

1. ஹரிகாம்போஜியின் ஜன்யமான கமாஸ் ராகம் உத்தரதேசத்திலிருந்து வந்தது; கம்மாஜென்று பெயருள்ளது. கர்னாடக வித்வான்களால் லக்ஷ்யத்தில் பல மாறுதல்களை யடைந்தது. ஸம்ப்ரதாயத்தை ஒட்டி இந்தக் கீர்த்தனம் பாடப்படுகிறது.

2. இதன் நடை: ஸ ம க ம ப த நி ஸ — ஸ நி த ப ம க ஸ. (ஆயினும் பல மதங்களுண்டு).

# மகாபாரதம்

## விராட பர்வம்.

[பாண்டவர்கள் திரௌபதியுடன் விராட நகரத்தில் அக்ஞாதவாசமிருக்கையில் ஒரு மல்லன் விராடநகரத்து மல்லர்களையெல்லாம் வென்றுவிடவே அரசன் கோபமடைந்து தன் மல்லர்களுக்கு அளித்தவற்றை யெல்லாம் பறிமுதல் செய்துவிடுமாறு கூறுகிறான்.]

அப்போது அரசனருகிலிருந்த கங்கபட்டரான யுதிஷ்டிரர், "அரசரே! கோபியாதேயும்; உம்முடைய பாகசாலைக்கு அதிபனான வலவன் மல்யுத்தத்திலே கைதேர்ந்தவன்; அவனை இவனோடு யுத்தஞ் செய்யச் சொல்லும்" என்றார். 'அப்படியே' என்று சம்மதித்து விராடன் வலவனை வரவழைத்து, அந்தக் கருவங்கொண்ட மல்லராஜனோடு மல்யுத்தஞ் செய்யச் சொன்னான். வலவனான பீமசேனனும் கச்சை கட்டிக்கொண்டு மற்போர் புரியும் ரங்கத்திற்கு வந்து, ஜீமுதனென்று பெயர் பெற்ற அந்த மல்லராஜனோடு கை கலந்தான். வெகுநேரம் மல்யுத்தம் நடந்தது. பார்த்தோர் அனைவரும் இருவருடைய திறமைகளையும் கண்டு வியந்தார்கள். கடைசியில் வலவன் மற்றவனைத் தூக்கித் தன் தலையைச் சுற்றிச் சுழற்றிவிட்டுக் கீழே எறிந்தான். இவ்வாறு அந்த மல்லராஜன் தோற்கடிக்கப்பட்டதும் விராடராஜன் வலவனுக்குச் சம்மானங்கள் செய்து, அவனை யானைகளோடும் சிங்கங்களோடும் போர் புரிந்து ஜனங்களைக் களிப்பிக்கச் செய்தான். பிறகு, அந்தப்புரத்திலுள்ள பெண்டிர் கண்டு களிக்குமாறு அவர்கள் முன் அமைக்கப்பட்ட ரங்கத்திலே சென்று யானைகளோடும் சிங்கங்களோடும் மற்போர் புரிந்தான். அந்த சங்கரோத்ஸவத்திலே, அர்ச்சுனன் பேடியாக அரசன் முன் சென்றும் அந்தப்புரத்திற்குள் அனுப்பப்பட்டும், எல்லோரையும் தன் பாடல்களாலும் ஆடல்களாலும் களிப்பித்தான். நகுல சகாதேவர்களும் குதிரை விளையாட்டங்களாலும் காளை விளையாட்டங்களாலும் அரசனையும் நகரத்தாரையும் களிப்பித்தார்கள். இவ்வாறு அந்த உத்ஸவத்திலே பிறருக்கு இன்பம் விளைக்குமாறு முயன்ற தன் கணவர்களைக் கண்ட திரௌபதி, அவர்கள் வீரச் செயல்களைக் கண்டு, ஒருவாறு களித்த போதிலும் அவர்கள் பிற மன்னனையண்டிப்பிழைத்து அவனை இன்புறுத்துவதற்கு இவ்வாறு பலவகையிலும் முயல்வதைக் கண்டு துக்கித்தாள்.

சங்கரோத்ஸவத்துக்குப் பிறகு, ஆறுமாதங்கள் சென்றன. பாண்டவர்களும் திரௌபதியும் விராடநகரத்துக்கு வந்து பத்து மாதங்களாயின. ஒரு வருஷகாலம் முற்றுப்பெறும் சமயம் நெருங்கிற்று. அப்பொழுது ஒரு நாள் விராட சேனாதிபதியான கீசகன், இராணியின் அரண்மனையிலுள்ள திரௌபதியைக் கண்டான். கண்டவுடன் காம



கிறிஸ்மஸின் சின்னம் ஜெர்மனியில் ஒவ்வொரு முக்கிய இடத்திலும் மரத்தில் செதுக்கப்பட்ட இந்த உருவங்கள் காணப்படுகின்றன. பி. பி. ஏ.

நோயாற் பீடிக்கப்பட்டு, அவன் இராணியிடம் வந்து "இராணி! இவளை நான் முன்பு இங்கு பார்த்ததில்லையே? கள்ளின் வாசனையே வெறியை உண்டாக்குவதுபோல இவளுடைய தரிசனமே வெறியை உண்டாக்குகிறது. தேவகன்னிகை போன்ற இவள் யார்? யாரைச் சேர்ந்தவள்? இவள் இங்கே யிருக்கக் காரணம் என்ன? இவள் மனதைக் கலக்கிவிட்டாள். இந்த நோய்க்கு வேறு மருந்தில்லை. இவள் உனக்குப் பணிவிடை செய்வது சரியல்ல; இவளுக்கு நான் பணிவிடை செய்ய வேண்டும். இவள் சகல ஐசுவரியங்களாலும் நிறைந்த என் அரண்மனையிலே சிறப்பாக விளங்க வேண்டும்" என்று கூறி சுதேஷ்ணையிடம் அனுமதி பெற்றுக்கொண்டு, திரௌபதியினருகிற் சென்றான்.

சிங்க கன்னிகையருகிலே ஒரு நரி செல்வதுபோல திரௌபதியருகிலே சென்ற கீசகன், "அம்மணி! நீயார்? எங்கிருந்து இங்கு வந்தாய்? உண்மையைச் சொல். உன் முகம் சந்திரபிம்பம் போலப் பிரகாசிக்கிறது. உன் இருகண்களும் தாமரையிதழ்களை ஒத்திருக்கின்றன. உன் குரல் குயிலின் ஒலியை ஒத்திருக்கிறது. இவ்வாறு வடிவழகு வாய்ந்தவளை நான் இதுவரை எங்குமே கண்டதில்லை. நீ தாமரையிலே வாழும் இலக்குமிதானோ? அல்லது பூமி தேவியோ? ஹ்ரீ தேவியோ? திருமகளோ? கீர்த்திதேவியோ? காந்தியோ? அனங்கனோடு வாழும் ரதிதேவியேயோ? உன்னுடைய கண்ணொளி மன்னும் நிலவொளி போன்றுள்ளது. உன் முகமாகிய சந்திரனைக் கண்ட எவனும் காமனுக்கு ஆட்படுவானன்றோ? மாலைகளை அணிதற்குரிய இந்த ஸ்தனங்கள் முகிழ்த்த தாமரை மொட்டுகளைப் போல அழகாக விளங்கி என் காமத்திற்குத் தூண்டுகோல்களாகின்றன. கைப்பிடியளவில் அமைந்துள்ள உன் சிற்றிடையைக் கண்டதும் எனது காமநோய் அதிகரிக்கின்றது. மன்மதன் நிர்த்தயனாய் என்னை எரிக்கிறான். உன்னை அளித்து மழையையொத்த உன்னுடன் சேர்க்கையினால் இத்தீயை அணைத்துவிடுவாயாக; உன்னை அணையவிரும்பும் என் ஆசைகளாகிற அம்புகள் என்மனதைப்பிளந்து என்னைச் சோர்வடையச் செய்கின்றன. உன்னையே எனக்கு அளித்தால் மட்டுமே நான் இவ்வம்புகளினின்றும் தப்பிப் பிழைக்கக்கூடும். அழகிய ஆடையாபரணங்களையும் பூமாலைகளையும் அணிந்து என்னுடன் இனிதாகப் பொழுது போக்குவாயாக; இவ்வாறு நீ இங்கு கஷ்டப்படுதல் தகுமோ? என்னோடு சிறந்த சுகங்களையெல்லாம் அனுபவிக்கத் தக்கவள் நீ; இவ்வாறு சிறந்த உன் அழகையெல்லாம் வீணாக்கலாமோ? மேலான பூமாலைகளை அணிந்துகொள்; மதுபானஞ் செய்து என்னுடன் இன்பமாயிரு. நான் என் மனைவிகளை இனிக் கண்ணெடுத்தும் பாரேன்; அவர்கள் எல்லாரையும் உனக்கு அடிமை செய்யச் சொல்கிறேன். நானும் உன் அடிமையாய் எப்பொழுதும் உன் சொற்படி நடந்துகொள்வேன்" என்று பலவாறு கீசகன் தகாத வார்த்தைகளைச் சொன்னான். அதைக் கேட்ட ஸைரந்திரி வேஷம் பூண்ட திரௌபதி, "நீர் என்னிடம் ஆசைகொள்வது சரியன்று; நான் பிறருடைய மனைவி; யார்க்கும் மனைவியிடம் பிரியம் இருப்பது ஸஹஜம்; அதுபோலவே என்னையும் என் பிரியமான கணவர் காப்பாற்றுகின்றனர்; தருமத்தை நினைந்துகொள்வீராக; ஸத்புருஷர்கள் தகாத காரியங்களைச் செய்யமாட்டார்கள்; பாப காரியங்களைச் செய்வோன் புகழை இழந்து அச்சதத்தையும் பெறுவான் அன்றோ?" என்று சொன்னாள்.

இவ்வாறு ஸைரந்திரி கூறியதும், கீசகன் பிறர் மனைவியை விழைதலாலுண்டாகும் தீங்குகளை அறிந்தவனாயினும் காமவசப்பட்டவனாய் பின்வருமாறு கூறினான்:—

"பெண்மணி! உன் புன்சிரிப்பும் திருமேனியழகும் என்னை வசப்படுத்திவிட்டன. உன் சொற்படி நடப்பேன்; ஆதலின், நீ என்னை இவ்வாறு மறுத்தல் தகாது; பின்பு, 'ஏன் மறுத்தேன்?' என்று வருந்த நேரிடும். இவ்வகண்ட இராச்சியத்திற்கும் நானே அதிகாரி; வீரத்தில் என்னை நிகர்ப்பவர் இப்பூமியில் எங்கும் இல்லை. ரூபத்திலோ யௌவனத்திலோ போகானுபவங்களிலோ என்னை மிஞ்சினவர் இல்லை;

என்னுடன் சகல காமங்களையும் அனுபவிக்கத் தகுதியுள்ள நீ இவ்வாறு அடிமைத் தனத்தில் ஆசைப்பட்டுக் கிடப்பாயோ? இந்த இராச்சியத்தையெல்லாம் உனக்குத் தந்தேன்; நீயே இராணியாக இருப்பாயாக; என்னையும் பெற்று இவ்விராஜ்யத்தையும் பெற்று இன்புறுவாயாக'' என்றான்.

இவ்வாறு கொடிய வார்த்தைகளைக்கூறியகீசகனைப் பார்த்து, 'அட; ஸூதபுத்திர! மையல் கொள்ளாதே; உயிரை வீணாய் இழவாதே, பயங்கரமான தோற்றத்தை யுடைய ஐவர் கந்தருவர்கள் என்னை ரக்ஷிக்கிறார்கள். அவர்கள் கோபங்கொண்டால் என்னை அப்படியே கொன்று போடுவார்கள். நீ பூமியுள் ஒளிந்து கொண்டாலும் சரி; கடலைக் கடந்து சென்றாலும் சரி; அந்த ஐவரினின்றும் தப்பிப் பிழைக்க முடியாது. தாய் மடியிலே கிடக்கும் சிசு சந்திரனைப் பெற விரும்புவது போன்றது நீ என்னை விரும்புவது'' என்று இடித்துக் கூறினாள்.

அதைக் கேட்ட கீசகன் அந்தப்புரத்திலிருந்த தன சகோதரியின் முன் காமாவேசத்தோடு சென்று அவள் பாதங்களில் வணங்கிக் கை கூப்பிப் பெருமூச்செறிந்து கொண்டு, பின் வருமாறு பிதற்றினான். "சுதேஷ்ணை! நீ தான் சீக்கிரம் ஸைரந்திரி என்னை விரும்பிச் சேருமாறு செய்யவேண்டும்; இல்லாவிடின் என் உயிர் நில்லாது. இன்றே நான் இறந்து விடுவேன'' என்று கீசகன கூறியதைக் கேட்ட சுதேஷ்ணை, "தம்பி! இவள் என்னைச் சரண் புகுந்தவள்; நான் இவளுக்கு அபயம் கொடுத்திருக்கிறேன்; அவளை நான் எப்படி உன்னிடம் வரச்சொல்லுவேன்? இவளை ஐந்து கந்தருவர்கள் ரக்ஷிக்கிறார்கள் எனறு என்னிடம் வேலைக்கு வந்தபோது சொன்னாள். அவர்கள் கோபங்கொண்டால் உன்னைக் கொன்று விடுவார்கள். விராடமன்னனே இவளைக் கண்டு மோகமுற்றார்; நான் கந்தருவர்களைப்பற்றிச் சொன்னபின் அவர் இவளை மனதாலும் நினைப்பதில்லை'' என்றாள். அதைக் கேட்ட கீசகன், "அக்கா! கந்தருவர்கள் நூறு ஆயிரம் பதினாயிரம் பேர்கள் வேண்டுமானால் வரட்டும்; நான் ஒருத்தனாய் அவர்களையெல்லாம் கொனறு போடுவேன். ஸ்திரீகளின் இயல்பை நீ அறியமாட்டாய். பிள்ளையோ பேரனோ சகோதரனோ யாராயினும் புஷ்பம் சந்தனம் முதலியவற்றால் அலங்கிருதனாயிருப்பதைக் கண்டால் பதிவிரதைகளுக்கும் இச்சையுண்டாகும். ஆதலின், நான் சகல பூஷணங்களையும் பூண்டு அலங்கிருதனாக இருக்கிறேன். அப்பொழுது அவள் என்னை வந்து காணுமாறு செய்தால், அவள் என் வசப்பட்டு விடுவாள்; நான் உயிரோடிருக்க வேண்டுமென்று நீ விரும்பினால் இது மட்டும் செய்ய வேண்டும்'' என்று கெஞ்சிக் கேட்டான்.

அதைக் கேட்டதும் சுதேஷ்ணைக்குத் துன்பம் அதிகரித்தது. 'உன்கதி இப்படி அதோகதியாகுமா? உன்னோடு உன் சகோதரர்களும் இறக்க நேரிடுமே! நன்மையை நாடாமல் இவ்வாறு காமத்திற்கு இடங்கொடுப்பது சரியன்று; என்னையுமல்லவா நீ பாப வழியில் ஏவுகின்றாய்? ஒருவன் செய்யும் பாவம் அவன் குலத்தையே கொன்று விடும் என்னும் வசனம் பொய்யல்லவே! நிச்சயமாய் நீ யமலோகஞ் செல்வாய்!' என்று அறிந்தும் சகோதர வாஞ்சையால் நான் உன் இஷ்டப்படி செய்கிறேன்; நீ உன் மாளிகைக்குச் சென்று விருந்து சமைக்கச் சொல்; பிறகு எனக்கு ஆள் அனுப்பு; நான இவளை உன்னிடமிருந்து மதுவன்னங்களை வாங்கி வர அனுப்புகிறேன. அப்பொழுது அவளை உன் மீது ப்ரியங்கொள்ளுமாறு செய்து கொள்'' என்றாள்.

இவ்வாறு சொல்லப்பட்ட கீசகன் அதிவேகமாய் தன மாளிகைக்குத் திரும்பிச்சென்று விருந்துணவுகளைத் தயார் செய்து கொண்டு தானே சுதேஷ்ணையிடம் வந்து, "எல்லாம் தயார் செய்து விட்டேன்; ஸைரந்திரியை என் அரண்மனைக்கு வருமாறு செய்வாயாக. 'என்னை இன்றே ஸைரந்திரியோடு சேர்த்துவை; இன்றேல் என் உயிரை மாய்த்து விடு'' என்று நான் பரமேசுவரரைப் பிரார்த்தித்துக் கொண்டுள்ளேன்'' என்றான்.

அதைக்கேட்ட சுதேஷ்ணை பெருமூச்செறிந்து கொண்டே "நீ உன் மாளிகைக்குத் திரும்பிச்செல்; நான் அவளை உன்னிடமிருந்து மதுவகைகளை வாங்கி வரச்சொல்லி அனுப்புகிறேன்'' என்றாள். கீசகன் உடனே தன் அரண்மனைக்குத் திரும்பினான். சுதேஷ்ணையும் ஸைரந்திரியைத் தன்னிடம் அழைத்து, "ஸைரந்திரி! நீ வேகமாக கீசகனுடைய மாளிகைக்குச் சென்று அவனிடமிருந்து நல்ல மதுவை வாங்கி வா; எனக்கு அதிகத் தாகமாக இருக்கிறது'' என்று ஏவினாள்.

அதைக்கேட்டதும் ஸைரந்திரி நடுநடுங்கி, "அம்மா! நான் அங்கு செல்லமாட்டேன். ஸூதபுத்திரர் என் மீது மோகங்கொண்டிருக்கிறார்; அவர் எதற்கும் அஞ்சமாட்டார் என்பது உங்களுக்குத் தெரியுமே. நான் முதன்முதலில் உங்களிடம் வேலைக்கு வந்தபோதே, "நான் பிறருக்குப் பணிவிடை செய்யமாட்டேன்'' என்று தெரிவித்திருக்கிறேன். உங்களுக்கு எத்தனையே வேலைக்காரிகள் இருக்கிறார்கள். அவர்களுள் ஒருத்தியை அனுப்புங்கள'' என்று வேண்டினாள்.

இவ்வாறு பாஞ்சாலி வேண்டவும் இராணி கோபங் கொண்டவளாய், "நான் உத்திரவிடுகிறேன்; நீ அவசியம் கீசகனுடைய மாளிகைக்குச் சென்று வரவேண்டும். வேறு யாரும் உனக்குச் சமானமாகமாட்டார்கள்; ஆகையால், வேறொருத்தியையும் அனுப்பமுடியாது; என் சகோதரன் நீ நினைப்பதுபோலக் கெட்டவன் அல்லன்; வீண் சந்தேகங் கொள்ளாதே'' என்று அதட்டி, மதுவை வாங்கி வருவதற்காக ஒரு பொற்கிண்ணத்தை இவள் கையிலே கொடுத்தனுப்பினாள். திரௌபதி அழுதுகொண்டே, அந்தக் கிண்ணத்தைக் கையிலே தாங்கிக்கொண்டு, தேவதைகளை வணங்கி, தன் மாமனார்களைக் குறித்து, "நான் பாண்டவர்களைத்தவிர வேறு எவனையும் நினையாத தூய சிந்தையுடையவளானால் கீசகன் என்னைக் கெடுக்காமலிருப்பானாக.'' என்று பிரார்த்தித்தான்.

திரௌபதியானவள் தன் மாமனார்களான தருமராஜரையும் இந்திரரையும் வாயுவையும் அசுவினி தேவர்களையும் பிரார்த்தித்து, சூரியன், குபேரன், வருணன், உருத்திரன், பகன், ஸ்கந்தன், பூஷா, ஸாவித்ரி, பிரம்மன் முதலிய தேவதைகளையும் துதித்து, சற்று நேரம் சூரியனை உபாஸித்து நின்றாள். அவள் மனதிலேயுள்ளதை அப்படியே அறிந்த சூரியபகவான் அவளை மறைந்து தொடர்ந்து சென்று காக்கும்படி ஒரு அரக்கனை அனுப்பினார்.

பிறகு திரௌபதி நடுங்கிக்கொண்டே கீசகனுடைய மாளிகைக்குச்சென்றாள். அக்கரை செல்லவிரும்பிக் காத்திருப்பவன் தோணியைக் கண்டால் எப்படித் துள்ளி எழுவானோ அப்படிக் கீசகன் அவளைக்கண்டதும் தன் ஆசனத்தினின்றும் எழுந்து அவளிடம் ஓடிவந்து காம வசத்தினால், "கண்மணி வா! எனக்கு இன்று பொழுது நன்றாக விடிந்தது. என்னை உன் வசமாக்கிக்கொள். இவ்வின்பங்களை என்னுடன் அனுபவிப்பாய். இந்தா இரத்தின மாலை; இதோ பொன் குண்டலங்கள்; இவை வான் பட்டாடை-இதோ பூசுவதற்கு நற்சாந்து. இவை பூமாலைகள். இதோ பொற்கிண்ணியில் அருந்த இனிய மது உள்ளது. இவைகளை ஏற்றுக்கொண்டு உன்னிச்சைப்படி இன்புறுவாயாக. இதோ படுக்கை நன்கு விரிக்கப்பட்டுள்ளது. என்னுடன் இதை அலங்கரி; நானே உனக்கேற்ற கணவன்!'' எனறு பிதற்றினான்.

இவ்வாறு கீசகன் கொடுமையாகக் கூறிய மொழிகளைக் கேட்ட திரௌபதி "நீ பேசும் பேச்சு சரியல்ல; பிராம்மண மகளைச் சண்டாளன் தொடலாகுமோ? அது போலவே நீயும் என்னைத் தொடலாகாது. பிறரில்லம் புகுவார் புகும் நரகவாசலை நீ இன்றே புகுவாயோ? சுதேஷ்ணை உன் வீட்டுக்கு என்னை அனுப்பினாள். அவளுக்குத் தாகமாயிருக்கிறதாம்; மது வாங்கிவரச் சொன்னாள். சீக்கிரம் மதுவை இக்கிண்ணியில் வார்த்துக்கொடு; நான் திரும்பவேண்டும்'' என்று சொன்னாள்.

(தொடரும்).




## நவநாகரீகக் குறிப்புகள்.

(காசினிஎழுதியது.)

விபூதிப்பட்டை ஒட்டியாணம்.

* * * ஒட்டியாணங்களில் எத்தனையோ தினுசுகள்; இதில் இன்னும் ஒரு புது தினுசு அன்று நான் பார்த்தேன். எங்கள் சிநேகிதி ஒருத்தி குழந்தைக்குக் காது குத்தி மஞ்சள் குங்குமம் என்று சிலரை அழைத்திருந்தாள். மஞ்சள் குங்குமத்திற்கு வந்திருந்த ஒரு மாது இந்தப் புது மோஸ்தர் ஒட்டியாணம் போட்டுக் கொண்டிருந்தாள். இது முன் பக்கத்துக்கு விபூதிப்பட்டைச் சங்கிலி மாதிரியில் செய்திருந்தது. அகலம் மட்டும் மூன்று விரல் அகலம் இருந்தது. பின்பக்கம் சாதாப் பட்டை ஒட்டியாணம் போல் செய்து அதில் சங்கிலியை இசைத்திருந்தது. 'பெல்ட்' மாதிரியில் பொத்தானும், ஓட்டைகளும் வைக்கப்பட்டிருந்தன. இஷ்டம்போல் ஒட்டியாணத்தைக் குறுக்கியும், பெரிதாக்கியும் போட்டுக் கொள்ளலாம். 'சகஜமான 'பெல்ட்' ஒட்டியாணம்போல் தானே? இதில் என்ன விசேஷம்?' என்று நீ கேட்கலாம். முன்பக்கம் சங்கிலி மாதிரியில் செய்திருப்பதால், இது சாதாரண ஒட்டியாணத்தைப் போலில்லாமல், நன்றாகப் படிந்து நிற்கும். வேணமட்டில் இறுக்கிப் போட்டுக் கொள்ளலாம். ஆனால் இந்த ஒட்டியாணம்—தினுசு என் அத்தைக்குப் பிடிக்கவில்லை. 'கொத்துக் கொத்தாய்ச் சலங்கை தொங்கினால்தான் ஒட்டியாணம் அழகாக இருக்கும். இந்தச் சலங்கை இல்லாத ஒட்டியாணமே எனக்குப் பிடிக்கவில்லை. அதுவும் சங்கிலியைத் தூக்கி இடுப்பில் கட்டிக்கொண்ட மாதிரியில் இது என்ன ஒட்டியாணம்? எல்லாம் உங்கள் காரியங்களே விசித்திரம்தான்! உன் சினேகிதி, காதுகுத்தல்—கலியாணம் கொண்டாடினதே ஒரு புதுமை!' என்று பொரிந்தாள்.

என் சினேகிதி ஆண்டுநிறைவுடன் தன் குழந்தைக்குக் காதுகுத்தி, தடபுடலாக மஞ்சள் குங்குமம் செய்வதுஎன்று ஏற்பாடு செய்திருந்தாள். ஆண்டு நிறைவுக்குப் பத்து நாள்களுக்குமுன் குழந்தைக்கு நல்ல சுரம் கண்டு தட்டம்மை போட்டி விட்டது. என்ன செய்வாள் பாவம்! எல்லாரையும் கூப்பிட்டுச் சிறப்பாக ஆண்டு நிறைவு கொண்டாடவேண்டும் என்று எவ்வளவோ ஆசைப்பட்டுக் கொண்டிருந்தாள். ஒருமாதம் ஆனபிறகு, குழந்தைக்குக் காதைக் குத்திப் பத்துப்பேர்களை அழைத்து ஆரத்தி செய்தாள். ஒன்று, ஆண்டு நிறைவன்று காது குத்த வேண்டுமாம், அல்லது, மூன்றாவது வயதில் குத்த வேண்டுமாம். இரண்டாம் பிராயத்தில் இரட்டைப்பட்ட வயதில் குத்தலாகாதாம். இதற்காகத்தான் அத்தை அவளைப் பரிகாசம் செய்தாள். என்னம்மா வழக்கங்கள்; எல்லாம் தற்காலத்தில் குழப்பமாகத்தான் முடிகிறது!

'குரேஷே' ஊசி வேலை'

சட்டை ஓரங்கள், கை ஓரங்கள், கழுத்து முதலிய இடங்களுக்குக் 'குரேஷே' ஊசி, 'டி.எம்.ஸி.' நூல் இரண்டையும் வைத்துக் கொண்டு பூவேலை தைக்கலாம். 'டி. எம். ஸி' நூல்கள் எத்தனையோ நிறங்களில் விற்கப்படுகின்றன. வேண்டிய நிறத்தில் வாங்கிக் கொண்டு, சட்டையைத் தைத்தும், வெறும் துணியிலும் இந்த வேலையைச் செய்யலாம். 'குரேஷே' ஊசி மெல்லியதாகவும், கூரானதாகவும் இருக்கவேண்டும். போட உத்தேசிக்கும் தினுசுக் கொடி முதலியவற்றைமுதலில் துணிமேல் பென்சிலால் வரைந்து கொள்ளவேண்டும். பிறகு அதன்மேல் பக்கத்திலிருந்து



ரக்ஷண்ய சேனைத் தலைவரின் மனைவி மிஸஸ் ஹிகின்ஸ் சென்னை விக்டோரியா பப்ளிக் ஹாலில் மிஸஸ் கானரன் ஸ்மித் தலைமையில் ஸ்திரீகள் கூட்டமொன்றில் பேசியபோது எடுத்த படம்.
பி. பி. பி.

'குரோஷே' ஊசியால் குத்திக் கீழ்ப்பக்கத்திலிருந்து நூலைக் கொடுத்து இழுக்க வேண்டும். இப்படிக் கிட்டக்கிட்ட குத்தி இழுத்தால் சங்கிலி போன்ற தையல் விழும். குத்தும்பொழுது ஒரு தையல் நீளமாகவும், ஒன்று குட்டையாகவும் விழும்படிக் குத்தக் கூடாது; தையல் ஒரே சீராக விழும்படித் தைக்கவேண்டும். இந்தத் தையல்கள் துணியின்மேல் படிந்திருக்கும். 'குரோஷே' ஊசி வேலையானதால் கை நிதானம் ஏற்பட்டுவிட்டால் சீக்கிரமாக சுலபமாகப் போடலாம். துணி சுருங்காமல் பார்த்துக் கொள்ளவேண்டும். சரிகைக் கம்பிகளைக்கொண்டு பட்டின்மேல் இவ்விதம் போடலாம். பார்வைக்கு அழகாக இருக்கும்.

### ரோஜாப் பூக்க

ரோஜாச் செடிகளை ஏராளமாகப் பூக்கச் செய்வதற்குப் பலர் பலவிதமான யுக்திகள் சொல்லுகிறார்கள். குதிரை எருவைப் போடுவதால் நன்றாகப் பூக்கும் என்பர் சிலர்; தினம் வீட்டில் காபி, டீ முதலியவைகள் போட்டான பிறகு அந்தச் சக்கைகளை வீண் போகாமல் சேகரித்து வைத்து ரோஜாச் செடிகளுக்கு எருவாக உபயோகித்தால் நல்லது என்று ஸர். சின்னையாவின் மகன் சொல்லுகிறான். 'ஆட்டு எருவே எல்லாவற்றையும்விட மேலானது, நாங்கள் அதுதான் போடுகிறோம்? எங்காத்துச் செடிகளை வேணுமானால் வந்து பாருங்கள். செடி தாங்காமல் மொட்டும் பூவுமாக நிறைந்திருக்கிறது.' என்று என் சிநேகிதி ஒருத்தி சாதிக்கிறாள். பதினைந்து தினங்களுக்கு ஒரு தடவை ஒரு கோழி முட்டையை அப்படியே உடைக்காமல், செடியின் வேரயிடில் புதைத்து விட்டால் ரோஜா நிறையப் பூக்கும் என்று ஒருவர் சொன்னார். இதில் எதைச் செய்தால் உங்காத்து ரோஜா நன்றாகப் பூக்குமோ, எனக்குத் தெரியவில்லை. செடி பூக்கும்வரையில் ஒன்று, ஒன்றாகச் செய்துபார். ஒரு சிறிய ஆணியைத்தண்டில் அடித்து வைப்பதால் செடி நன்றாகப் பூக்கும் என்றும் கேள்விப்பட்டிருக்கிறேன் அதையும் வேண்டுமானால் செய். பதியம் போடக் கணுக்கள் இருக்கும் இடத்தில் சற்றுப் பருமனான தண்டாகப் பார்த்துச் சாய்வாக நறுக்க வேண்டும்; நம்பதியங்களையும் தாழ்த்தி நடவேண்டும். இப்படிச் செய்தால் பதியம் உலர்ந்து போகாமல துளிர்விட்டு வளருமாம்; இது, ஆனாபிள், சிவன் வீட்டுத் தோட்டக்காரன் சொன்னான். இந்த தினுசில் பதியம் போட்டுப்பார்; ஒரு வேளை பதியங்கள் பிழைக்கலாம்; மற்றைய விஷயங்கள் அடுத்த கடிதத்தில்.




சீனுவில் ஒரு முக்கிய நகரமான ஷாங்கேயின் தோற்றம். படத்தில் காணப்படும் ரோடு ஷாங்கேயிலிருந்து நாங்கினுக்குச் செல்லுகிறது. பல கடைகளும் டிராம், பஸ் வண்டிகளும் அதில் காணப்படுகின்றன. ஜி. எஸ். ஏ.



மிஸ்டர் ஜூலியன் விலி என்பவர் "டிக் விட்டிங்டன்" என்ற நாடகத்தில் நடிப்பதற்கு அழகான பெண்கள் வேண்டுமென்று அறிவிக்கவே லண்டனில் அவருடைய நாடகக் கொட்டகைக்கு வெளியில் நூற்றுக்கணக்கான பெண்கள் வந்து கூடிய காக்ஷி.
டபிள்யூ. என். பி. எஸ்.



ஜப்பானில் டோக்கியோ நகரத்திலும் அதன் சுற்றுப்புறங்களிலும் பலமான புயல் அடித்ததில் சுமார் 100 பேர்களுக்குமேல் கொல்லப்பட்டுப் பலர் காயமடைந்தனர். பொருட் சேதம் சுமார் 50 லக்ஷம் என்னுக்கு மேலிருக்குமென்று மதிப்பிடப்பட்டது. சேதமடைந்த சில பிரதேசங்களின் தோற்றம் படத்தில் காணப்படுகிறது.
இ. என். பி.



போட்டோ எடுக்கும் கருவியில் பூதக்கண்ணாடியின் முன் பக்கம் 6 பட்டையுள்ளதாகச் செய்யப்பட்டு அதைக்கொண்டு எடுக்கப்பட்ட ஒரு பெண்ணின் படம். சினிமாக்களில் கனவுகளைக் காட்ட இந்த முறை அனுஷ்டிக்கப்படுகிறதாம். ஜி.எஸ். எ.




சென்னை ஸங்கீதக் கழகத்தின் ஆதரவில் நடக்கும் வருஷாந்தர ஸங்கீத மகாநாடு சென்றவாரம் செட்டிநாட்டு ராஜாவால் திறந்து வைக்கப்பட்டபோது எடுக்கப்பட்ட படம். வித்வான் டைகர் வரதாச்சாரியார் தலைமை வகித்தார். பி. பி. பி.



சென்னை புதிய ஷெரிப் ஜனுப் ஆதம் ஹாஜி மகமது ஸேட்டிற்கு எழும்பூர் வெல்லிங்டனில் தோட்டக் கச்சேரி நடத்தப்பட்டபோது எடுத்த படம். புதிய ஷெரிப் மாலையுடன் காணப்படுகிறார், பி. என். ஏ.



அலகபாத்தில் கூடிய ஒற்றுமை மகாநாட்டில் மேடை மீதிருந்த பிரபல தலைவர்கள். அக்கிராஸனதிபதி ஸ்ரீமான் ஸி. விஜயராகவாச்சாரியாருக்குப் பக்கத்தில் ஆள்வார்மகாராஜா உட்கார்ந்திருக்கிறார். ஜி. எஸ். ஏ.



லக்ஷ்மணபுரி ஸர்வகலாசாலையில் 1932-ம் வருஷத்திய எம். ஏ. பரீக்ஷையில் ஆங்கிலத்தில் முதலாவதாகத் தேறிய கானிங் காலேஜ் மாணவி மிஸ் எவலின் வாசந்தி முகுர்ஜி. ஐ. என். ஏ.



புதுச்சேரி நங்கையர் நல்வழிச் சங்கத்தின் தலைவர் அதன் மெம்பர்களுக்குச் சமீபத்தில் ஒரு தோட்டக்கச்சேரி நடத்திய போது எடுத்த படம். பி. ஆர். எஸ்



டியூபர்குலாஸிஸ் என்ற சுவாசாசயக் கழலை நோயை ஆயிரக்கணக்கானவர்களுக்குச் சேர்ந்தாப் போல் குணப்படுத்து முறையைக் கண்டு பிடித்திருக்கும் ஜெர்மன் நிபுணர் டாக்டர் பிரெட்ரிக் பிரான்ஸ் பிரீட்மன் ஹங்கேரியில் ஒரு நகரத்தில் இருபதினாயிரம் பேர்கள் இவருடைய முறையால் குணப்படுத்தப்பட்டனர். பி. பி. ஏ.

ஹாஸ்யப்பகுதி

லோக ஸஞ்சாரியின்

# பரமானந்தக் குறிப்புகள்

(ஏகாந்தவாஸி எழுதியது.)

முகாம்— கர்னாடகப் பிராந்தியத்தின் வழியே பம்பாய் செல்லும் மார்க்கம்.

தங்களைச் சிறுமைப் படுத்தும் மேலதிகாரிகளை எந்த விதத்திலேனும் திருப்திப் படுத்தி, சொற்ப நன்மைகளைப் பெறுவதற்காக, சில சில்லரைத் தெய்வங்கள், தங்களுக்குக் கீழுள்ள நிரபராதிகளுக்கு அனாவசியமாகத் துன்பங்களை இழைப்பதில், எவ்வளவு ஆர்வமுடையவர்களாகிவிடுகிறார்களென்பதற்கு, நான் இன்று கால் வைத்த இச்சிறு சமஸ்தானத்தின் அதிபதி தக்கதோர் உதாரண புருஷராக விளங்குகிறார். இந்தியா ஐம்பத்தாறு தேசங்களடங்கியதென கதா காலக்ஷேபங்கள் செய்யும் பாகவதர்கள் மேள தாளங்களுடன் வர்ணித்துக் கூறுவதைப் பலரும் கேட்டிருப்பார்கள். ஆனால், தற்போது இந்தப் பரந்த பாரத நாட்டிலே, 562 சுதேச சமஸ்தானங்களும், அவற்றைத் தனித் தனியே, 'அரசு' புரியும் ராஜாதி ராஜர்களும் இருக்கின்றார்களென்பது சாதாரணமாய் எல்லோருக்கும் தெரிந்திருக்காது. புராணங்களில் குறிப்பிடப்பட்ட ஐம்பத்தாறு தேசங்கள், அறுநூற்றுத் தொண்ணூற்று மூன்று தேசங்களாகப் பெருகி, பிறகு ஐநூற்று அறுபத்திரண்டு சமஸ்தானங்களாகக் குறுகி விட்ட விருத்தாந்தத்தை விசாரிக்கப் புகுந்தால், அதனின்றும் வெளிப்படும் விஷயங்கள் தேசாபிமானமுள்ளவர்களுக்கு வெட்கத்தையும் துயரத்தையும் உண்டுபண்ணக்கூடுமாதலால், அந்த ஆராய்ச்சியில் புகாமல், இன்று என் பாதையில் குறுக்கிட்ட இந்தச் சிறு சமஸ்தான அதிபதியின் அதிசயச் செய்கைகளை மட்டும் குறித்து வைக்கின்றேன்.

இந்தச் சமஸ்தானத்தின் விஸ்தீரணம் ஒன்றேகால் சதுர மைலுக்கும் மேலில்லை. இதனிலுள்ள பிரஜைகளின் தொகையோ குழந்தைகள் விருத்தர்கள் உள்பட 530 பெயர்கள் தான். சமஸ்தானாதிபதியின் மொத்த வருஷ வருமானம் சற்றுக் குறைய இரண்டாயிரம் ரூபாயிருக்குமாம். ஆயினும், இந்த ராஜ்யத்தின் ராஜா, தமது ஆட்சியை நிருபிக்க, தமது சமஸ்தானத்தில் 'ஹைகோர்ட்' ஒன்று ஏற்படுத்தி வைத்திருக்கின்றார். அந்த ஹைகோர்ட்டின் பிரதான நீதிபதிக்கு வருஷச் சம்பளம் ஐம்பது ரூபாயென்று தெரிகின்றது. அவர், நியாயம் வழங்கும் ஹைகோர்ட் ஸ்தலம், சமஸ்தானாதிபதியின் அரண்மனையெனப்படும், சத்திரம் போன்ற வீட்டுத் தாழ்வாரத்தின் ஒரு மூலையில் இருக்கின்றது. இந்த ஹைகோர்ட்டின் பிரதான நீதிபதியே, இந்தச் சமஸ்தான மன்னருக்குப் பிரதம மந்திரியாகவும் வேலை பார்க்க நியமிக்கப்பட்டிருக்கின்றார்.



லண்டனில் ரேடியம் கம்பெனியில் வேலை செய்பவர் ரேடியத்தை உப்பைப் போன்ற உருவத்தில் பெற்று சிறிய ஊசிகளைப் போல் பாக் செய்கிறார். இது அபாயகரமாயும் உள்ளது. ரேடியம் ஒரே சீராக இல்லாவிட்டால் அதால் சிகிச்சை பெறுபவர் இறந்து விடக்கூடும். தமக்கு அபாயம் நேராமலிருக்க அவர் கைகளை ஒரு கூட்டுக்குள் தோலால் மூடி வைத்துக்கொண்டு வேலை செய்கிறார். இ. என். பி.

ஹைகோர்ட் ஒன்று இருப்பதாகத் தெரிந்ததன்மேல், கீழ்த்தரக் கோர்ட்டுகளும், ஒன்றரைச் சதுர மைல் விஸ்தீரணமுள்ள இந்தப் பெரிய சமஸ்தானத்தில் இருக்கின்றனவோ வென்று விசாரித்தேன். ஹைகோர்ட்டில் நீதிபதி அமர்ந்து நியாயம் வழங்க நேரிடும் சந்தர்ப்பங்கள் வெகு அபூர்வமாகவே ஏற்படுமாம். சாதாரணமாய் சமஸ்தானத்தில் ஏற்படும் எல்லா வழக்குகளையும், சமஸ்தானாதிபதியே, மாஜிஸ்டிரேட்டாகவும், முனிஸிபாகவும், கசையடி கொடுக்கும் சேவகனாகவும் இருந்து பைசல் செய்து விடுவாராம். சமஸ்தானாதிபதி வழக்குகளை விசாரித்து நியாயம் வழங்கும் இடங்கள், அவர் வசிக்கும், கிராமச் சாவடி போன்ற அரண்மனையின் வாயிலாகவோ, நடு வீதியாகவோ இருந்துவிடக் கூடும். குறையுள்ள பிரஜைகள் எந்தச் சமயத்திலும் அவரைக் கண்ட விடத்து தங்கள் முறைப்பாட்டைத் தெரிவித்துப் பிரியாது செய்து கொள்ளலாம். ஆனால், பிரியாதுடன் ஒரு ரூபாயையும் சேர்த்து வைத்துக் கொடுக்க வேண்டும். பணமில்லாது பிரியாது செய்து கொள்ள முன்வருகிற பிரஜை, ராஜாவை அவமதிக்கத் துணிந்த குற்றவாளியாகக் கருதப்படுவான். மன்னரிடம் நேரில் கொடுக்கப்படும் பிரியாதுகளை அவர் இஷ்டப்பட்டால், உடனே விசாரணைக் கெடுத்துக்கொண்டு, எதிரிக்குத் தக்க தண்டனையை விதித்து விடலாம்; எவ்வித விசாரணையும் நடத்தாமலும், பிரியாதியை வாசித்துப் பாராமலும் தள்ளி விட்டாலும் விடலாம். எல்லாம் மன்னரின் திருவுளச் சம்மதத்தைப் பொருத்தது.

இந்தச் சமஸ்தானத்தில், வழக்குகளைக் கிரிமினல், ஸிவில் என்ற பாகுபாடுகள் செய்வதில்லை. எல்லாக் குற்றத்திற்கும், இருவகைத் தண்டனை விதிக்கப்பட மன்னர் சட்டமேற்படுத்தியிருக்கிறாராம். ஒன்று அபராத தண்டனை; மற்றொரு வகைத் தண்டனை அடி. அபராதம் ரூபாய் ஐம்பதாக இருந்தால், அடி இருபத்தைந்தாக இருக்குமாம். வசூலிக்கப்படும் அபராதத் தொகை, ராஜாவின் சட்டைப் பைக்குள்ளும், அடிகள், அவற்றைப் பெறுவதற்கெனக் குறிப்பிடப்பட்ட நபரின் முதுகின்மீதும் உடனுக்குடன் போய்ச் சேர்ந்து விடுமாம். அபராதங்கள் மூலமாக கைக்குக்கிடைக்கும் வருமானத்தை உத்தேசித்து, மன்னர், தமது ஹைகோர்ட்டு நீதிபதிக்கு, எந்த வழக்கையும் விசாரிக்கும் சிரமத்தை யளிப்பதில்லையாம். மன்னரின் தீர்ப்பே முடிவானது. அதற்கு மேல் அப்பீல் இல்லை. ஏனென்றால், கும்பெனியார் ஆட்சி நடத்திவந்த காலத்தில், இந்த சமஸ்தானத்தின் சிங்காதனத்தில் அமருகிறவர்களுக்கு, தங்களுக்கடங்கிய பிரஜைகளின் மீது மரண தண்டனை, தேசப்பிரஷ்டம் உள்பட சகலவிதத் தண்டனைகளையும் விதிக்க சர்வாதிகார உரிமையளித்து ஸன்னது கொடுத்திருக்கின்றார்கள். தற்போதைய இந்தியா கவர்ன்மெண்டோ, பிரிட்டிஷ் கவர்ன்மெண்டோ, அந்த ஸன்னதைப் பிடுங்கி விடுவதற்கில்லை.

சென்ற இரண்டு வருஷங்களாக இந்த ராஜா, தமது சமஸ்தானத்தில், புதியதோர் ராஜாக்ஞையைப் பிறப்பித்து அமுல் செலுத்திவருகின்றார். அந்த உத்தரவின்படி கதர் துணி தரித்தவர்கள் எவரும் இந்த சமஸ்தான எல்லைக்குள் நுழையக் கூடாது. ராஜபாட்டையானது சுமார் ஒரு மைல் தூரத்திற்கு, இந்தச் சமஸ்தான எல்லைக்குட்பட்ட பிரதேசத்தின் வழியே செல்வதால், நான் அகஸ்

மாத்தாக இந்தச்சமஸ்தானதிபதியின் அதிகார அமுலுக்கு உட்பட வேண்டியவனுகி விட்டேன்.

ரஸ்தாவில் சுங்கச் சாவடி போன்று காணப்பட்ட ஒரு சிறு குடிசைக்குள்ளிருந்து இரு சேவகர்கள், வெளியே வந்து, வழியே போய்க்கொண்டிருந்த என்னை நிறுத்தி, எனது மூட்டை முடிச்சுகளைப் பரிசோதனை செய்தார்கள். அரையில் கட்டியிருந்த துணியையும், தலைப்பாகையையும் தொட்டுத் தொட்டுப் பார்த்தார்கள். ஏதாவது சுங்கத் தொகை கேட்பார்களோ வெனப் பயந்தேன். அப்படி எதுவும் அவர்கள் கேட்கவில்லை. அவர்களிருவருக்கும், என் கையிலிருந்த பிரும்ம பத்திரப் புகையை ஒரு தம் இழுக்கும்படிக் கொடுத்துச் சிநேகஞ் செய்து கொண்டு, என்னைச் சோதனை செய்ததன் காரணங்களென்னவெனக் கேட்டேன்.

இந்தச் சமஸ்தானதிபதிக்கு, கதர் ஆடை உடுத்தியிருப்பவர்களைக்கண்டால்கோபம் வந்துவிடுவது சென்ற ஒன்றிரண்டு வருஷங்களாக வழக்கமாகி விட்டதாம். அவரது பிரஜைகளில் எவரும், கதரையோ, அல்லது கதர் போன்ற துணியையோ தரிக்கக் கூடாது. மீறிநடப்பவர்களுக்குத் தேசப் பிரஷ்டதண்டனை விதிக்கப்படுமாம். இந்த எச்சரிக்கையை, சமஸ்தான ராஜாங்க விசேஷ அறிக்கையொன்றின் மூலமாக இந்த ராஜா தண்டோரா போட்டுப் பகிரங்கப்படுத்தியிருக்கின்றார். தேசப் பிரஷ்ட உத்தரவையோ, அபராத அடி தண்டனைகளையோ, என்போன்ற அன்னிய வழிப்போக்கர்களின் மீது அமுல் செலுத்த முயலுவது அனர்த்தத்தில் வந்து முடியுமென்பது இவருக்குத் தெரிந்திருக்கவேண்டும். எனவே, புத்திசாலியான இந்த ராஜா என்போன்றவர்கள் விஷயத்தில் பிரத்தியேக நடவடிக்கை கிரமங்கள் எடுத்துக் கொள்ளப்பட ஏற்பாடு செய்திருக்கின்றார்.

தமது சமஸ்தான எல்லைக்குள் ரஸ்தா பிரவேசிக்குமிடத்தில், ராஜா இரண்டு சேவகர்களைக் காவல்புரிய நியமித்திருக்கின்றார். அவ்வழியே வரும் பாதசாரிகளை (மோட்டாரில் செல்கிறவர்களுக்கு இத்தொந்தரவு இல்லை) இவர்கள் வழிமறித்து நிறுத்தி, அவர்கள் அணிந்திருக்கும் ஆடைகள் கதராடைகளா எனச் சோதிப்பார்கள். கதராக இருந்தால், அவற்றைக் கழற்றிக்கொடுக்கும்படிக் கேட்டு வாங்கிக்கொண்டு, பதிலுக்கு, உடுத்திக் கொள்ள, அசல் சீமைத் துணியொன்றைக் கொடுப்பார்கள். அத்துணியை உடுத்திக் கொண்டு பாதசாரி மேலே செல்லவேண்டும். ஒரு சேவகன மட்டும் அவன் பின்தொடர்ந்து வருவான். ஒரு மைல் தூரம் நடந்து சமஸ்தான எல்லையைக் கடந்துவிட்டால், அங்கு பின்தொடர்ந்து வந்த சேவகன், பாதசாரியின் கதராடைகளைத் திருப்பிக் கொடுத்துவிட்டு, தான் கொடுத்த சீமைத் துணியைத் திரும்பப் பெற்றுக்கொண்டு போய்விடுவான். இது இந்தச் சமஸ்தானத்தில், இன்னும் நடைபெறும் சம்பவமாக இருக்கின்றது.

இந்தச்சமஸ்தானதிபதி, கதரைக் கண்டு, இப்படி வெறிக்கூத்தாடுவதன் காரணங்களென்னவென்பதை அறிய எனக்கு ஆவலுண்டாகியிருக்கின்றது. எனவே, இங்கு, இரண்டு மூன்று தினங்கள் முகாம் செய்து விசாரித்தறியத் தீர்மானித்திருக்கின்றேன். விசாரணையில் வெளிப்படும் விஷயங்களை அடுத்த குறிப்பில் எழுதியனுப்புகின்றேன்.''

---

முதல் மனிதன்:—கோவிந்தனைப்பற்றி உலாவும் வதந்தியைக் கேள்விப்பட்டாயோ?

இரண்டாவது மனிதன்:—நான்தானே அதைக் கிளப்பிவிட்டேன்?

---

ஆசிரியர்:— அரைக்காலில் 4-ல் ஒரு பாகம் என்ன?

ரங்கன்:—அது எனக்கு நிச்சயமாகத் தெரியாது; இருந்தாலும் கவலைப்படுமாறு அவ்வளவு அதிகமாயிராது.



# நோயற்ற வாழ்வு



## சோஷம் அல்லது இளைத்தல்.

(ஆயுர்வேத பூஷணம், ஆயுர்வேதாசார்ய பண்டித எம். துரைசாமி அய்யங்கார் எழுதியது.)

### க்ஷயம் என்றால் என்ன?

தேஹத்திற்குப்போஷணைக் குறைவால் காணும் இளைப்புக்கு ஆயுர்வேதத்தில் சோஷம் என்று பெயர். இதுவே ''க்ஷீணம்'' என்றும், 'க்ஷயம்' என்றும் கூறப்படும். ஆனால் ஆங்கிலத்தில் 'கன்ஸம்ப்ஷன்' என்றும் 'ட்யுபர்குலாஸிஸ்' என்றும் வழங்கப்படுகிற வியாதியை 'க்ஷயம்' என்கிற பெயரால் அனைவரும் மிகவும் ஸாதாரணமாக வழங்குகிறார்கள். உண்மையில் கன்ஸம்ப்ஷன் அல்லது ட்யுபர்குலாஸிஸ் என்பது ஆயுர்வேத சாஸ்திரப்படி, 'ராஜயக்ஷ்ம' அல்லது 'க்ஷயகாஸம்' என்று மொழியப்படுகிறது. 'சோஷம்' என்றாலும், 'க்ஷயம்' என்றாலும் இளைத்தல் என்றுதான் பொருள்படும். அவ்வித இளைத்தல் ராஜயக்ஷ்மாவினாலும், வேறுபல வியாதிகளாலும அல்லது பல காரணங்களாலும் காணலாம். ராஜயக்ஷ்மாவினால், விசேஷமாக உடல் சோஷிப்பதாலும், அப்படி உண்டாகும் உடலிளைப்பு அநேகமாய் அபாயகரமாயிருப்பதாலும் இதற்கு 'க்ஷயம்' என்கிற பெயரே பிராபல்யமடைந்து விட்டதாகத் தெரிகிறது. ''கேஷாஞ் சிதேவ சோஷோ ஹி லக்ஷணைர்ப் பேதமாகத:நது த்ரிதோஷலிங்கானாம் ஸமஸ்தானாம் நிபாதநம்; க்ஷயா எவ ஹி • தேஜஸ்ஞேயா: கேவலம் தாதுஸம்ஜ்ஜிதா:''

''சிலருக்கு சோஷமானது குறிகளில் வித்தியாஸப்படும்; அவர்களிடம் ராஜயக்ஷ்மாவுக்கு நியதமாயுள்ள மூன்று தோஷங்களின் கோளாறுலானகுறிகள்சேர்ந்தாற்போல் காணபபடுவதில்லை; அவ்விதப் பிணியாளர்களுக்கு ஏற்பட்டுள்ள கோளாறுகளைச்சாதாரணமாக தாதுக்கள் க்ஷீணமடைந்ததாலான வெறும் க்ஷயம் என்றே கருதவேண்டும்'' என்கிறார் ஸுச்ருதர். என்றால் ராஜயக்ஷ்மாவினால உண்டாகும் கடுமையான உடலிளைப்பைத் தவிர, வேறு காரணங்களால் தேஹம் இளைத்துப்போவதை ஸாதாரண சோஷம் அல்லது க்ஷயம் என்றுதான் கூறவேண்டும் என்பது அதன் கருத்து.

### இளைப்புக்குக் காரணம்.

அடிக்கடியும் இடைவிடாது தேஹ தாதுக்களில் இயற்கையாகவே ஏற்பட்டுவரும் கழிவுகளை மீண்டும் ஈடு செய்வதற்காக அப்போதைக்கப்போது ஏற்ற போஷணை இன்றியமையாதது; அப்போஷணையினாலேதான் ஒவ்வொரு அவயவத்தினுடையவும், பொதுவாக முழுத்தேஹத்தினுடையவும் ஆரோக்கிய நிலைமை ஒழுங்காகக் காணப்படும். ''சரீரத்திலுள்ள ஒவ்வொரு தாதுவும் அததற்கு இயல்பான உஷ்ணத்தினால் பக்குவமடைந்து, அததைச் சேர்ந்த ஸ்ரோதஸ்ஸுகள் என்னும் மிகவும் நுண்ணிய குழல்கள் மூலமாய் போஷணையையும் இடைவிடாது அடைந்து வருகின்றது''—''யதாஸ்வேனோஷ்மணா பாகம் சாரீரா யாந்தி தாதவ:. ஸ்ரோதஸா சவதாஸ்வேந தாது: புஷ்யதி தாதுநா'' என்கிறார் சரகர். ''யக்ஷ்மணா காரணைச் சாங்னைர் யதி தாதுர் ந புஷ்யதி, தேஹம் வா போஷணம் நைதி. சோஷம்ருச்சதி ஸக்ரமாத்''—''ராஜயக்ஷ்மாவினாலாவது, வேறு காரணங்களாலாவது மாம்ஸம் முதலிய தாதுக்களில் ஏதாவது அல்லது முழுத் தேஹமாவது ஏற்ற: போஷணையை அப்போதைக்கப்போது பெறுவிட்டால் அக்குறிப்பிட்ட தாதுவாவது முழுச சரீரமுமாவது சோஷம் என்கிற இளைப்பைக் கிரமமாகப் பெற்றுவரும்.''



அயர்லாந்து தேசத்து நாய் ஒன்று தனது குட்டியை ஒரு குழந்தை வண்டியில் வைத்து இழுத்துக்கொண்டு உலாவச் செல்லும் காட்சி.
ஜி. எஸ். எ.

ஆரோக்கிய நிலைமையில் தேஹதாதுக்கள் அவற்றில் அப்போதைக்கப்போது ஏற்படும் கழிவுகளுக்குத் தகுந்தவாறு போஷணையையும் ஏற்றுக்கொள்ளுமாகையால், அப்போது தேஹாரோக்கியத்தின் தாரசு முனை நடுநிலைமையை நன்கு நாடி நிற்கும். ஆனால் தேஹத்திற்கு எவ்விதமான அநாரோக்கிய நிலைமை நேரிட்டபோதிலும் இந்த நடு நிலைமையானது சொற்பமாகவேனும் அதிகமாகவேனும் பாதிக்கப்பட்டு அக்காரணத்தினால் சரீரம் முற்றிலுமாவது சரீரத்தின் சில பாகமாவது (a) மிகக் குறைவான அல்லது (b) மிக்க அமிதமான போஷணையைப் பெற்றுவிடும். இவற்றுள் முதற் கோளாறு எக்காரணத்தினால் உண்டானபோதிலும் 'சோஷம்' அல்லது 'க்ஷயம்' என்றும், பிந்தியது 'மேதோரோகம்' என்றும் கூறப்படுவது வழக்கம். இவ்விரண்டு நிலைமைகளும் தேஹபலத்தைக் குறைத்து, தேஹாரோக்கியத்தைச் சீரழியச் செய்பவையே. சோஷம் என்பது பலவகைப்பட்ட வெவ்வேறு காரணங்களால் உண்டாகும். அது குறிப்பிடக்கூடிய எவ்வித வியாதியையும் காரணமாகப் பெறாமல் ஏற்றவாறு உணவு மூலமான போஷணையைப் பெறாமல் ஏற்படலாம்.

### வியாதிகளாலான இளைப்பு.

சோஷம் என்கிற இளைப்பையுண்டாக்கக்கூடிய வியாதிகளுள் வெகு ஸாதாரணமானவை ஜீர்ண கோசங்களுக்குச் சம்பந்தப்பட்டவையே; ஏனெனில், ஜீர்ண கோசங்கள் தான் நாம் உண்ணும் ஒவ்வோர் உணவுப் பொருளையும் தேஹ தாதுக்களுக்கு ஏற்றவாறு பக்குவம் செய்து, அந்தந்த தாதுவுக்கும் தேவையான அம்சங்களை இரஸ தாது மூலமாக உடலெங்கும் வியாபிக்கச் செய்ய முதற் கருவியாயேற்பட்டிருக்கிறது. ஜீர்ண கோசத்தின் அச் சக்தியையே அக்னி அல்லது ஜாடராக்னியென்று ஆயுர்வேதம் கூறும். ''அந்த அக்னியின் மூலமாகத்தான் தேஹ பலமும், உயிர் வாழ்க்கையும மனிதருக்கு நிலைத்திருக்கும்'' என்று ''அக்நி மூலம் பலம் பும்ஸாம் அக்நி மூலம் ஹி ஜீவிதம்'' என்கிற வைத்திய முதுமொழி கூறுகின்றது.

உணவு பக்குவம் செய்யப்பட்டும், அதிலிருந்துண்டான இரஸ தாது இரக்தாதி தாதுவாகப் பரிணாமமடைய முடியாமல் மற்ற அவயவங்கள் கோளாறடைந்தால், அப்பொழுதும் சோஷம் ஏற்படும். இவ்விதமான சோஷம் ராஜயக்ஷ்மாவாகவே பெரும்பாலும் அமையும். ஏனெனில், ஜாடராக்னியைத் தவிர்த்து, மற்றுந் தாதுக்களைச் சேர்ந்த தாதூஷ்மா என்கிற உஷ்ணமும் மிக க்ஷீணித்து, ஸ்ரோதஸ்ஸுக்கள் என்கிற போஷணைக்கான நுண்ணிய நாடீ துவாரங்கள் அடைபட்டு, அதனால் இரத்தம் குறைந்து, மாம்ஸாதி தாதுக்களும் போஷணையைப் பெறாமல தேஹ முழுமைக்கும் இளைப்பைத் தரும அஸாதாரணமான நிலைமை அப்பொழுது காண்கிறது; அதைத்தான் ராஜயக்ஷ்மா என்போம். இதே விஷயத்தை ''ஸ்ரோதஸாம் ஸந்நிரோதாச் ச ரக்தாதீநாஞ் ச ஸங்க்ஷயாத், தாதூஷ்மணாஞ் சாபசயாத் ராஜயக்ஷ்மா ப்ரவர்த்ததே' என்கிற ச்லோகம் விளக்குகின்றது.

### க்ஷயகாஸத்தாலான இளைப்பு.

ஜீர்ண கோசம் கோளாறடைவதாலும், இரஸதாது முதலியது செல்லும் ஸ்ரோதோமார்க்கங்கள் அடைபடுவதாலும் தாதுக்கள போஷணையைப் பெறாமல் க்ஷயமடைந்து ராஜயக்ஷ்மா ஏற்படுவது போலவே, ச்வாஸ மார்க்கம் கோளாறடைந்து, போதிய பிராண வாயு இரத்தத்திற் கலக்காமல்

மாத்தாக இந்தச்சமஸ்தாஞதிபதியின் அதிகார அமுலுக்கு உட்பட வேண்டியவஞகி விட்டேன்.

ரஸ்தாவில் சுங்கச் சாவடி போன்று காணப்பட்ட ஒரு சிறு குடிசைக்குள்ளிருந்து இரு சேவகர்கள், வெளியே வந்து, வழியே போய்க் கொண்டிருந்த என்னை நிறுத்தி, எனது மூட்டை முடிச்சுகளைப் பரிசோதனை செய்தார்கள். அரையில் கட்டியிருந்த துணியையும், தலைப்பாகையையும் தொட்டுத் தொட்டுப் பார்த்தார்கள். ஏதாவது சுங்கத் தொகை கேட்பார்களோ வெனப் பயந்தேன். அப்படி எதுவும் அவர்கள் கேட்கவில்லை. அவர்களிருவருக்கும், என் கையிலிருந்த பிரும்ம பத்திரப் புகையை ஒரு தம் இழுக்கும்படிக் கொடுத்துச் சிநேகஞ் செய்து கொண்டு, என்னைச் சோதனை செய்ததன் காரணங்களென்னவெனக் கேட்டேன்.

இந்தச் சமஸ்தாஞதிபதிக்கு, கதர் ஆடை உடுத்தியிருப்பவர்களைக்கண்டால்கோபம் வந்து விடுவது சென்ற ஒன்றிரண்டு வருஷங்களாக வழக்கமாகி விட்டதாம். அவரது பிரஜைகளில் எவரும், கதரையோ, அல்லது கதர் போன்ற துணியையோ தரிக்கக் கூடாது. மீறிநடப்பவர்களுக்குத் தேசப் பிரஷ்டதண்டனை விதிக்கப்படுமாம். இந்த எச்சரிக்கையை, சமஸ்தான ராஜாங்க விசேஷ அறிக்கையொன்றின் மூலமாக இந்த ராஜா தண்டோரா போட்டுப் பகிரங்கப்படுத்தியிருக்கின்ருர். தேசப் பிரஷ்ட உத்தரவையோ, அபராத அடி தண்டனைகளையோ, என்போன்ற அன்னிய வழிப்போக்கர்களின் மீது அமுல் செலுத்த முயலுவது அனர்த்தத்தில் வந்து முடியுமென்பது இவருக்குத் தெரிந்திருக்கவேண்டும். எனவே, புத்திசாலியான இந்த ராஜா என்போன்றவர்கள் விஷயத்தில் பிரத்தியேக நடவடிக்கை கிரமங்கள் எடுத்துக் கொள்ளப்பட ஏற்பாடு செய்திருக்கின்ருர்.

தமது சமஸ்தான எல்லைக்குள் ரஸ்தா பிரவேசிக்குமிடத்தில், ராஜா இரண்டு சேவகர்களைக் காவல்புரிய நியமித்திருக்கின்ருர். அவ்வழியே வரும் பாதசாரிகளை (மோட்டாரில் செல்கிறவர்களுக்கு இத்தொந்தரவு இல்லை) இவர்கள் வழிமறித்து நிறுத்தி, அவர்கள் அணிந்திருக்கும் ஆடைகள் கதராடைகளா எனச் சோதிப்பார்கள். கதராக இருந்தால், அவற்றைக் கழற்றிக்கொடுக்கும்படிக் கேட்டு வாங்கிக்கொண்டு, பதிலுக்கு, உடுத்திக் கொள்ள, அசல் சீமைத் துணியொன்றைக் கொடுப்பார்கள். அத்துணியை உடுத்திக் கொண்டு பாதசாரி மேலே செல்லவேண்டும். ஒரு சேவகன் மட்டும் அவன் பின்தொடர்ந்து வருவான். ஒரு மைல் தூரம் நடந்து சமஸ்தான எல்லையைக் கடந்துவிட்டால், அங்கு பின்தொடர்ந்து வந்த சேவகன், பாதசாரியின் கதராடைகளைத் திருப்பிக் கொடுத்துவிட்டு, தான் கொடுத்த சீமைத் துணியைத் திரும்பப் பெற்றுக்கொண்டு போய்விடுவான். இது இந்தச் சமஸ்தானத்தில், இன்னும் நடைபெறும் சம்பவமாக இருக்கின்றது.

இந்தச்சமஸ்தாஞதிபதி, கதரைக் கண்டு, இப்படி வெறிக் கூத்தாடுவதன் காரணங்களென்னவென்பதை அறிய எனக்கு ஆவலுண்டாகியிருக்கின்றது. எனவே, இங்கு, இரண்டு மூன்று தினங்கள் முகாம் செய்து விசாரித்தறியத் தீர்மானித்திருக்கின்றேன். விசாரணையில் வெளிப்படும் விஷயங்களை அடுத்த குறிப்பில் எழுதியனுப்புகின்றேன்.''

---

முதல் மனிதன்:—கோவிந்தனைப்பற்றி உலாவும் வதந்தியைக் கேள்விப்பட்டாயோ?

இரண்டாவது மனிதன்:—நான்தானே அதைக் கிளப்பிவிட்டேன்?

---

ஆசிரியர்:— அரைக்காலில் 4-ல் ஒரு பாகம் என்ன?

ரங்கன்:—அது எனக்கு நிச்சயமாகத் தெரியாது; இருந்தாலும் கவலைப்படுமாறு அவ்வளவு அதிகமாயிராது.



# நோயற்ற வாழ்வு



## சோஷம்
அல்லது
## இளைத்தல்.

(ஆயுர்வேத பூஷணம், ஆயுர்வேதாசார்ய பண்டித எம். துரைசாமி அய்யங்கார் எழுதியது.)

### க்ஷயம் என்றால் என்ன?

தேஹத்திற்குப்போஷணைக் குறைவால் காணும் இளைப்புக்கு ஆயுர்வேதத்தில் சோஷம் என்று பெயர். இதுவே ''க்ஷீணம்'' என்றும், 'க்ஷயம்' என்றும் கூறப்படும். ஆனால் ஆங்கிலத்தில் 'கன்ஸம்ப்ஷன்' என்றும் 'ட்யுபர்குலாஸிஸ்' என்றும் வழங்கப்படுகிற வியாதியை 'க்ஷயம்' என்கிற பெயரால் அனைவரும் வெகு ஸாதாரணமாக வழங்குகிறார்கள். உண்மையில் கன்ஸம்ப்ஷன் அல்லது ட்யுபர்குலாஸிஸ் என்பது ஆயுர்வேத சாஸ்திரப்படி, 'ராஜயக்ஷ்ம' அல்லது 'க்ஷயகாஸம்' என்ற மொழியப்படுகிறது. 'சோஷம்' என்றாலும், 'க்ஷயம்' என்றாலும் இளைத்தல் என்றுதான் பொருள்படும். அவ்வித இளைத்தல் ராஜயக்ஷ்மாவினாலும், வேறுபல வியாதிகளாலும அல்லது பல காரணங்களாலும் காணலாம். ராஜயக்ஷ்மாவினால், விசேஷமாக உடல் சோஷிப்பதாலும், அப்படி உண்டாகும் உடலிளைப்பு அநேகமாய் அபாயகரமாயிருப்பதாலும் இதற்கு 'க்ஷயம்' என்கிற பெயரே பிராபல்யமடைந்து விட்டதாகத் தெரிகிறது. ''கேஷாஞ்சிதேவ சோஷோ ஹி லக்ஷணைர்ப் பேதமாகத:ந்து த்ரிதோஷலிங்காநாம் ஸமஸ்தாநாம் நிபாதநம், க்ஷயா எவ ஹி • தேஜ்ஞேயா: கேவலம் தாதுஸம்ஜ ஜிதா:''

''சிலருக்கு சோஷமானது குறிகளில் வித்தியாஸப்படும்; அவர்களிடம் ராஜயக்ஷ்மாவுக்கு நியதமாயுள்ள மூன்று தோஷங்களின் கோளாறுலானகுறிகள்சேர்ந்தாற்போல் காணப்படுவதில்லை; அவ்விதப் பிணியாளர்களுக்கு ஏற்பட்டுள்ள சோளாறுகளைச்சாதாரணமாக தாதுக்கள் க்ஷீணமடைந்ததாலான வெறும் க்ஷயம் என்றே கருதவேண்டும்'' என்கிறார் ஸுச்ருதர். என்றால் ராஜயக்ஷ்மாவினால உண்டாகும் கடுமையான உடலிளைப்பைத் தவிர, வேறு காரணங்களால் தேஹம் இளைத்துப்போவதை ஸாதாரண சோஷம் அல்லது க்ஷயம் என்றுதான் கூறவேண்டும் என்பது அதன் கருத்து.

### இளைப்புக்குக் காரணம்.

அடிக்கடியும் இடைவிடாது தேஹ தாதுக்களில் இயற்கையாகவே ஏற்பட்டுவரும் கழிவுகளை மீண்டும் ஈடு செய்வதற்காக அப்போதைக்கப்போது ஏற்ற போஷணை இன்றியமையாதது; அப்போஷணையினாலேதான் ஒவ்வொரு அவயவத்தினுடையவும், பொதுவாக முழுத்தேஹத்தினுடையவும் ஆரோக்கிய நிலைமை ஒழுங்காகக் காணப்படும். ''சரீரத்திலுள்ள ஒவ்வொரு



அயர்லாந்து தேசத்து நாய் ஒன்று தனது குட்டியை ஒரு குழந்தை வண்டியில் வைத்து இழுத்துக்கொண்டு உலாவச் செல்லும் காட்சி.
ஜி. எஸ். எ.

தாதுவும் அததற்கு இயல்பான உஷ்ணத்தினால் பக்குவமடைந்து, அதைச் சேர்ந்த ஸ்ரோதஸ்ஸுக்கள் என்னும் மிகவும் நுண்ணிய குழல்கள் மூலமாய் போஷணையையும் இடைவிடாது அடைந்து வருகின்றது''—''யதாஸ்வேநோஷ்மணா பாகம் சாரீரா யாந்தி தாதவ:. ஸ்ரோதஸா சவதாஸ்வேந தாது: புஷ்யதி தாதுநா'' என்கிறார் சரகர். ''யக்ஷ்மணா காரணைச் சாநைபர் யதி தாதுர் ந புஷ்யதி, தேஹம் வா போஷணம் நைதி. சோஷம்ருச்சதி ஸக்ரமாத்''—''ராஜயக்ஷ்மாவினாலாவது, வேறு காரணங்களாலாவது மாம்ஸம் முதலிய தாதுக்களில் ஏதாவது அல்லது முழுத் தேஹமாவது ஏற்ற: போஷணையை அப்போதைக்கப்போது பெறுவிட்டால் அக்குறிப்பிட்ட தாதுவாவது முழுச் சரீரமுமாவது சோஷம் என்கிற இளைப்பைக் கிரமமாகப் பெற்று வரும்.''

ஆரோக்கிய நிலைமையில் தேஹதாதுக்கள் அவற்றில் அப்போதைக்கப்போது ஏற்படும் கழிவுகளுக்குத் தகுந்தவாறு போஷணையையும் ஏற்றுக்கொள்ளுமாகையால், அப்போது தேஹாரோக்கியத்தின் தாரசு முளை நடுநிலைமையை நன்கு நாடி நிற்கும். ஆனால் தேஹத்திற்கு எவ்விதமான அநாரோக்கிய நிலைமை நேரிட்டபோதிலும் இந்த நடு நிலைமையானது சொற்பமாகவேனும் அதிகமாகவேனும் பாதிக்கப்பட்டு அக்காரணத்தினால் சரீரம் முற்றிலுமாவது சரீரத்தின் சில பாகமாவது (a) மிகக் குறைவான அல்லது (b) மிக்க அமிதமான போஷணையைப் பெற்றுவிடும். இவற்றுள் முதற் கோளாறு எக்காரணத்தினால் உண்டானபோதிலும் 'சோஷம்' அல்லது 'க்ஷயம்' என்றும், பிந்தியது 'மேதோரோகம்' என்றும் கூறப்படுவது வழக்கம். இவ்விரண்டு நிலைமைகளும் தேஹபலத்தைக் குறைத்து, தேஹாரோக்கியத்தைச் சீரழியச் செய்பவையே. சோஷம் என்பது பல வகைப்பட்ட வெவ்வேறு காரணங்களால் உண்டாகும். அது குறிப்பிடக்கூடிய எவ்வித வியாதியையும் காரணமாகப் பெறாமல் ஏற்றவாறு உணவு மூலமான போஷணையைப் பெறாமல் ஏற்படலாம்.

### வியாதிகளாலான இளைப்பு.

சோஷம் என்கிற இளைப்பையுண்டாக்கக்கூடிய வியாதிகளுள் வெகு ஸாதாரணமானவை ஜீர்ண கோசங்களுக்குச் சம்பந்தப்பட்டவையே; ஏனெனில், ஜீர்ண கோசங்கள்தான் நாம் உண்ணும் ஒவ்வோர் உணவுப் பொருளையும் தேஹ தாதுக்களுக்கு ஏற்றவாறு பக்குவம் செய்து, அந்தந்த தாதுவுக்கும் தேவையான அம்சங்களை இரஸ தாது மூலமாக உடலெங்கும் வியாபிக்கச் செய்ய முதற் கருவியாயேற்பட்டிருக்கிறது. ஜீர்ண கோசத்தின் அச் சக்தியையே அக்னி அல்லது ஜாடராக்னி யென்று ஆயுர்வேதம் கூறும். ''அந்த அக்னியின் மூலமாகத்தான் தேஹ பலமும், உயிர் வாழ்க்கையும மனிதருக்கு நிலைத்திருக்கும்'' என்று ''அக்நி மூலம் பலம் பும்ஸாம் அக்நி மூலம் ஹி ஜீவிதம்'' என்கிற வைத்திய முதுமொழி கூறுகின்றது.

உணவு பக்குவம் செய்யப்பட்டும், அதிலிருந்துண்டான இரஸ தாது இரக்தாதி தாதுவாகப் பரிணமமடைய முடியாமல் மற்றஅவயவங்கள் கோளாறடைந்தால், அப்பொழுதும் சோஷம் ஏற்படும். இவ்விதமான சோஷம் ராஜயக்ஷ்மாவாகவே பெரும்பாலும் அமையும். ஏனெனில், ஜாடராக்னியைத் தவிர்த்து, மற்றத் தாதுக்களைச் சேர்ந்த தாதூஷ்மா என்கிற உஷ்ணமும் மிக க்ஷீணித்து, ஸ்ரோதஸ்ஸுக்கள் என்கிற போஷணைக்கான நுண்ணிய நாடி துவாரங்கள் அடைபட்டு, அதனால் இரத்தம் குறைந்து, மாம்ஸாதி தாதுக்களும் போஷணையைப் பெறாமல தேஹ முழுமைக்கும் இளைப்பைத் தரும அஸாதாரணமான நிலைமை அப்பொழுது காண்கிறது; அதைத்தான் ராஜயக்ஷ்மா என்போம். இதே விஷயத்தை ''ஸ்ரோதஸாம் ஸந்நிரோதாச் ச ரக்தாதீநாஞ் ச ஸங்க்ஷயாத், தாதூஷ்மணாஞ் சாபசயாத் ராஜயக்ஷ்மா ப்ரவர்த்ததே' என்கிற ச்லோகம் விளக்குகின்றது.

### க்ஷயகாஸத்தாலான இளைப்பு.

ஜீர்ண கோசம் கோளாறடைவதாலும், இரஸதாது முதலியதுசெல்லும்ஸ்ரோதோமார்க்கங்கள் அடைபடுவதாலும் தாதுக்கள போஷணையைப் பெறாமல் க்ஷயமடைந்து ராஜயக்ஷ்மா ஏற்படுவது போலவே, ச்வாஸ மார்க்கம் கோளாறடைந்து, போதிய பிராண வாயு இரத்தத்திற் கலக்காமல்

அதன் மூலமாகவும் சோஷம் என்கிற இளைப்பு ஏற்படும்; இதில் ச்வாஸாசயத்துக்குச் சம்பந்தப்பட்ட இருமல் முதலிய கோளாறுகளும் தோன்றுவது ஸஹஜமாகையால், இவ்வித க்ஷயத்தை "க்ஷயகாஸம்" என்கிற ஒரு வகை ராஜயக்ஷ்மாவாகக் கூறுகிறது சாஸ்திரம். இவ்விதக் காரணத்தாலான ராஜயக்ஷ்மாவானது கிரமமாக ஜாடராக்னியையும் அழித்து, முழுத் தேஹத்துக்கும் இளைப்பையும் அழிவையும் உண்டு பண்ணும். இதில் மார்பு பிளக்கப்படுவது போன்ற வேதனை, பக்கவலிப்பு, உடல் இளைப்பு, சரீரபலம் நிறம் முதலியவை ஒடுங்கிப் போதல், உணவில் வெறுப்பு, ஜ்வரம், மனச்சோர்வு, அதிஸாரம் அல்லது மலபந்தம் முதலிய கோளாறுகள் தோன்றும்.—"உரோவிருஜ்யதே த்யர்த்தம் பித்யதேத விபஜ்யதே, ப்ரபீட்யதேதத: பார்ச்வே சுஷ்யத்யங்கம் ப்ரவேபதே, க்ரமாத் வீர்யம் பலம் வர்ணோருசி ரக்னிச்ச ஹீயதே, ஜ்வரோ வ்யதா மனோதைந்யம் விட்பேதாக்னிவதாவபி*****" என்கிறார் மாதவகரர்.

### ஏகாங்க சோஷம்.

முழுத் தேஹமும் பல காரணங்களால் சோஷிப்பது போல், சுறுசுறுப்பின்மையினால் ஏதேனும் ஓர் அவயவங்கூட மற்ற அவயவங்களினும் பலத்திலும் பருமனிலும் போஷணையின்மையினால் குன்றிவிடலாம். "யத்யதாஸ்தே க்ரியா ஹீநம் அங்கம் தத்தீந ஸத்வகம், ந புஷ்யதி க்ரமாத் ஸ்யாத்தாத் தூர்ப்பரம் வயதிதம் ஸதா" என்கிற ச்லோகம் அதே விஷயத்தைக் கூறுகிறது. சுறுசுறுப்பில்லாத தனிப்பட்ட ஒவ்வோர் அவயவமும் போஷணையைப் பெற வகையில்லாமல், தேஹத்துக்கு வீண் சுமையாகப் போய் மனிதனுக்கு அத் தூர்ப்பலமான அவயவம் அதிக துன்பந்தரக் கூடியதாகவே ஆகுமென்றும் அப்பத்தியம் விளக்குகின்றது. ஒவ்வோர் அவயவமாகிலும் சரி, முழுத் தேஹமும் சரி; ஏற்றவளவு பலத்துடனும் புஷ்டியுடனும் இருக்க வேண்டுமானால், உணவு மூலமாயேற்படும் போஷணையும், ச்வாசமூலமாயேற்படும் இரத்த சக்தியும், வியாயாமம் என்கிற அசைவினால் ஏற்படும் உத்ஸாஹமும் அவற்றிற்கு மிகவும் இன்றியமையாதவையாம். உணவின் போஷணையின்மையினால் சோஷம் ஏற்படுவதுபோல், உத்ஸாஹக்குறைவு அல்லது வியாயாமமின்மையினாலும் சோஷம் என்கிற இளைப்பு நிச்சயமாக ஏற்படும். இவ்விதமான சோஷம் வாதரோகங்களை உண்டு பண்ணும்; அல்லது வாதரோகங்களால் இவ்வித சோஷம் உண்டாகும். "தாது நாம் ஸங்க்ஷயாத் சிந்தா சோக ரோகாதி கர்ஷணாத், வேக ஸந்தாரணாத் ஆமாத் அபிகாதாத் அபோஜநாத்,*****தேஹேஸ் ரோதாம்ஸி ரிக்தாநி பூரயித்வாநிலோபலீ, கரோதி விவிதாந் வ்யாதீந் ஸர்வாங்கைகாங்கஸம் ச்ரயாந்.*** ஸங்கோச: பர்வணாம் ஸ்தம்ப:*** 1"—"தாதுக்கள் க்ஷயிப்பது, மனக்கவலை, துயரம், வேறு ரோகங்களால் பீடிக்கப்பட்டு இளைத்துப் போதல், மல மூத்திராதிகளை அடக்குதல், அஜீர்ண தோஷம், அடிபடுதல், பட்டினி கிடத்தல் முதலிய காரணங்களால் ஸ்ரோதோ மார்க்கங்கள் என்கிற போஷணைக்கான துவாரங்கள் சூனியமாய் விடவே, அவற்றில் வாததோஷம் அதிகரித்து, ஒவ்வோர் அவயவத்தையாவது அல்லது அகிலதேஹத்தையுமாவது ஆச்ரயித்த அநேகம்வியாதிகளையுண்டு பண்ணும்; இதில் அவயவங்கள் சுஷ்கிக்கும்; கணுக்கள் அசைக்கமுடியாமல் விரைத்துக் கொள்ளும்**" என்று லக்ஷணங்கள் கூறப்படுகின்றன. இதிலிருந்து வாத ரோகத்திற்குச் சோஷமும், சோஷத்திற்கு வாத ரோகமும் பரஸ்பரம் காரணமாகின்றன என்பது விளங்கும்.

### இளைப்பு ஏற்படும் வகை.

எந்த அவயவமாவது, முழுத்தேஹமுமாவது இளைக்க ஆரம்பித்தால், முதலில் அந்த அவயவத்திற்கு அல்லது முழுத்தேஹத்துக்குப் பரவ வேண்டிய இரத்தம் போதிய அளவு பரவாமல், போஷணைக் குறைவு ஏற்படும். இந்த மாறுதல் எந்தக் காரணத்தினால் ஏற்படும் சோஷத்திலும் முதன் முதல் முக்கியமாகக் காணும். இதற்கு அடுத்தாற்போல் தேஹநிறம் வெளிறிவிடும். "பாண்டு தேஹோ யதாபூர்வம் க்ஷீயந்தே சாஸ்ய தாதவ:" —உடல் வாடி வெளிறிய பிறகு கிரமமாக மற்றத்தாதுக்களும் க்ஷீணமடைய, பொதுவாக இளைப்பு அல்லது சோஷம் முழுக்குறிகளுடன் தோன்றும். எக்காரணத்தினால் உண்டாகும் சோஷத்திலும் பொதுவாக பிராணாதாரமான ஓஜஸ் என்னும் தாது க்ஷயித்து, உடல் இளைத்து, மனம் சோர்ந்து, மனிதன் பெரிதும் ஊக்கங்குன்றி, எழுந்திருக்கச் சக்தியற்று உழலுவான்.

### பரிஹார முறைகள்.

இதற்கேற்ற சிகித்ஸையைப்பற்றி இனிச் சிறிது விவரிப்போம். பொதுவாக எல்லாச் சோஷ நிலைமைகளிலும், அது எக்காரணத்தினால் ஏற்பட்டது எந்த அவயவத்தைப்பற்றியது என்கிற அம்சத்தை விளங்கத் தெரிந்து கொண்டு, அப்பால் சிகித்ஸை செய்ய முயலுவது எளிது. போஷணையைக் கொடுக்கக் கூடிய உணவு பரிசுத்தமான வாயு, ஒழுங்கான வியாயாமம் ஆகியவை. சிகித்ஸையில் பொதுவாகக் கவனிக்கக் கூடிய ஸாதாரண அம்சங்கள் போஷணையின்மையினாலோ, வேறு காரணங்களாலோ ஏற்பட்ட சோஷத்தில் பெரும்பான்மையோருக்கு வெந்நீரில் தினந்தோறும் ஸ்நானம் செய்வது தான் ஏற்றதாயிருக்கும். ஜீர்ணக் கோளாறால் ஏற்படும் சோஷத்தில் முதலில் ஜீர்ணாசயத்தைச் சரியான நிலைமைக்குக் கொண்டுவர முயலவேண்டும். அஜீர்ணத்தினாலே, வாத ரோகங்களாலோ, வேறு வியாதிகளாலோ காண்கிற இளைப்புக்கு அதற்குக் காரணமான வியாதிக்கு ஏற்ற சிகித்ஸை செய்து விட்டால், இளைப்பு என்பது தானே பெரும்பாலும் நிவ்ருத்தியாய்விடும். ஆனால் அவ்விதம் சோஷத்திற்குக் காரணமாயுள்ள ஒவ்வொரு வியாதிக்கும் ஏற்ற சிகித்ஸைகள் எவையோ அவற்றையெல்லாம் இந்த ஒரு நிருபத்தில் விவரித்தெழுதுவது ஸாத்யமில்லை. ஸாமாந்யமாகப் போஷணைக் குறைவாலான சோஷத்திற்கு அடியிற் குறிக்கப்படும் சில ஔஷதங்கள் வெகு சிறந்த பலன்தரக்கூடியவை:—

| | | |
|---|---|---|
| 1. கர்ஜூரக்காய் (விதை நீக்கியது) | பலம் | 5 |
| 2. திப்பிலி | ,, | 2½ |
| 3. திராக்ஷை | ,, | 5 |
| 4. கடுக்காய் (விதை நீக்கியது) | ,, | 1 |
| 5. பூனைக்காலி விதை | ,, | 5 |

இவற்றுள் 2, 4, 5 இச்சரக்குகளைப் பொடி செய்து, வஸ்திரகாளநம் செய்து கொள்ளவும். மற்ற இரண்டையும் நன்கு இடித்துக் கொள்ளவும். அரைவீசை கற்கண்டைப் பொடித்து, ½ படி பசுவின் பாலில் கலந்து, காய்ச்சவும். பாகு பதமாக வரும்போது, திப்பிலி முதலியவற்றின் சூர்ணத்தைக் கலந்து நன்றாகக் குழையப் பக்குவம் செய்து, ஆறிய பிறகு ஒரு குப்பியில் எடுத்து வைத்துக் கொண்டு, தினத்துக்கு மூன்று முறையாக வேளைக்கு 2 தோலா வீதம் பெரியவர்கள் உட்கொண்டு வரலாம். சிறியவர்களுக்கு அதில் பாதியளவு கொடுக்கலாம். இது தேக புஷ்டியுண்டுபண்ணும்.

| | |
|---|---|
| கோமூத்ர சிலாஜது பஸ்பம் | 1 பங்கு |
| மௌக்திக பஸ்மம் | ½ ,, |
| வைக்ராந்த பஸ்மம் | 2 ,, |

இவற்றை ஒன்றாகக்கலந்து, வேளைக்கு ஐந்தாறு குன்றுமணியெடை வீதம் வெண்ணெயில் தினத்துக்கு இரண்டு மூன்று முறை சாப்பாட்டுக்குப் பிறகு சில வாரம் உட்கொள்ளலாம்.

முற்கூறிய இரண்டு முறைகளைத் தவிர அகஸ்திய ஹரீதகிலேஹ்யம், சந்திரப்ரபாவடிகா, (சார்ங்கதர ஸம்ஹிதை முறைகள்) அச்வகந்தாரிஷ்டம், வஸந்த குஸுமாகாரஸம் (சார்ங்கதர ஸம்ஹிதை), ஆயுஷ்ய ரஸாயநம் ஆகிய ஔஷதங்களும் ப்ருஹ்மண குணத்தில் சிறந்தவை. (ப்ருஹ்மணம்--புஷ்டி தருவது.)

### மிதபோஜனம்.

இளைத்த தேஹமும் பலக்குறைவுமுள்ளவர் தம் தேஹ போஷணையை விருத்திசெய்து கொள்ள ஆவல்கொண்டு அமிதமான உணவுகளை உண்பதும், கிடைக்கும்போதெல்லாம் எல்லா உணவுகளையும் வேளையறியாமல் உட்கொள்வதும் பிசகு. அப்படிச் செய்வதால் அவர்கள் வெகு எளிதில் அஜீர்ணத்திற்கும், வேறு பல அஸௌக்கியங்களுக்கும் ஆளாவார்கள். வேளையறிந்து, தமது ஜீர்ண சக்தியின் நிலைமையை உணர்ந்து புஷ்டி தரக்கூடிய உணவுகளை அளவாகப் புசித்து வரவேண்டும். கோதுமை அன்னம், துவரை, பயறு முதலிய பருப்பு வகைகள், வெண்டை, முருங்கை, சேம்பு, அவரை, கீரைவகைகள், வாழை முதலிய சாகங்கள், பால்வெண்ணெய், நெய், கனிவகைகள் ஆகியவை போஷணைக்குரிய உணவுப் பொருட்கள். மாம்ஸமுண்ணும் வழக்கமுள்ளவருக்கு மிதமான இறைச்சியும், மாம்ஸரஸமும் வெகு உபயோகமானவை.

### மனக்களிப்பு.

இவ்வனைத்திலும் முக்கியமான மற்றோர் அம்சம் மனத்தென்பே. மனதுக்குச் சந்தோஷமும், சரீரத்துக்குச் சுறுசுறுப்பும் இல்லாவிடில் முற்கூறிய ஔஷதங்களும் உணவுகளும் உற்றவாறு தேஹத்தைப் போஷிக்கமாட்டா. "ப்ருஹ்மணை ரௌஷதை ரந்நைஸ் தாத்ருசை: பலவர்க்கை: வ்யாயாமே நச புஷ்யந்தி க்ருசாஸ் ஸந்த்ருப்த மாநஸா:"-பல காரணங்களால் உடலிளைத்துப் போனவர் ப்ருஹ்மண குணமுள்ள ஔஷதங்களாலும், அதேவிதமான உணவுகளாலும், கனிவர்க்கங்களாலும், வியாயாமத்தினாலும் புஷ்டியடைவார்கள்; ஆனால் அவர்கள் இவற்றையுபயோகித்துக் கொண்டு மிக்க மனத்தென்புடன் இருப்பது புஷ்டியடைவதற்கு அவசியமான விஷயம் என்கிறார் கதநிக்ரஹக்காரர்.




### சரபேந்திர பூபால குறவஞ்சி.

(மாயக்கூத்தன் எழுதியது.)

சென்ற வாரப் பதிப்பில் கொட்டையூர் ஸ்ரீ சிவக்கொழுந்து தேசிகரியற்றிய சரபேந்திர பூபால குறவஞ்சியின் முற்பகுதியைப் பற்றி எழுதினேன். "வாசலிது, வாசலிது என்று வாசல் வளம் சொல்லும் மடந்தையே, நீ யாரடி" என்று மதனவல்லியாம் நாயகி குறத்தியை வினவுகிறாள். அப்பொழுது குறத்தி தன் சாதி வளத்தை எடுத்திசைக்கிறாள்.

செந்திருமால் என்றனக்கு
  மைத்துனன் காணம்மே
திங்களணி சிவனெனக்குத்
  தமையன் முறையம்மே.
அந்த மிகுங் கந்தனெங்கள்
  மருமகன் காணம்மே.
அன்ன நடை வள்ளி எங்கள்
  கன்னிகை காணம்மே.

என்று சாதிப் பெருமையை விளக்கிய பின், குறச்சாதிக்கு எல்லா ம்லைகளும சொந்தமானாலும் மற்ற மலைகளைவிடுத்து, குறவர்கள் சரபோஜி மன்னன் மலையான நேரி மலையிலே வசிப்பதற்குக் காரணம் கூறுகிறாள். மேரு மலையை சாபமலை (வில்லான மலை—சபிக்கப்பட்ட மலை) என்று விட்டு வந்தார்களாம்; கைலைமலையிலே பூதங்களைக் கண்டு 'சிவப்பிரீதி' என்று விலகி வந்தார்களாம்; திண்ணன் என்னும் கண்ணப்பன் கண்ணைப் பறித்த மலை என்று காளத்தியை விட்டுக் குற்றால மலை சென்றார்களாம்; அங்குள்ளவர்கள் இவர்களை "அருவியில் மூழ்கிடுவீர்" (அருவியிலேமூழ்குங்கள்; அருவியிலே மூழ்கப்போகிறீர்களே.) என்றார்களாம். அதை விட்டு வடவேங்கட மலையேறிச் சென்று இருக்கலாமென்று பார்த்தார்களாம். அது "மால்கொண்ட மலை" (விஷ்ணுவுள்ள மலை—மயக்கங்கொண்ட மலை) என்று கேட்டு அவ்வெண்ணத்தை விட்டார்களாம்,

தங்கமகாமேரு வினில்
  தண் குடிசை தொடுத்
    தோம்;
சாபமலை என்றுரைத்தார்
  தாபமொடு விடுத்தேம்;
சங்கரனார் கைலை மலை
  தனிலுறையச் சென்றோம்;
தவப் பூதகணங்கள் கண்
    டோம்,
சிவ பிரீதி என்றோம்.
திங்களணி காளத்தி
  கண்டதனை நயந்தோம்;
"திண்ணன் கண்ணைப் பறித்
    தது முன்
  இன்னது," என்றார்; பயந்
    தோம்
அங்குலவு குற்றால
  மலையினுறப் போனோம்,
"அருவியின் மூழ்கிடுவீர்"
    என்றார்;
  நழுவி வாலானோம்.
எறிவடவேங்கடத்தில்
இருக்க இடம் பார்த்தோம்;
"இன்னது மால் கொண்ட
    மலை"
என்றுரைத்தார்; தீர்த்தோம்.
ஈறிலுயர் பழனி மலை
இனிதெனவே குறித்தோம்;
'இடும்பன்மலை' எனப் புகன்
    றார்;
திடங் கொளதை வெறுத்
    தோம்.
நேரிமலை மேற் குடிசை
நிலைக்கவைத் தோமம்மே;
நீடு மது வெங்கள் குடி
தழைக்க வைத்த நம்மே.

இவ்வாறு மலைகளையும் தலங்களையும் நதிகளையும் நாடுகளையும் பாடியபின், குறத்தி சோழ நாட்டின் வளங்கூறுகிறாள். அப்பாட்டிலே ஒரு சரணம் வருமாறு!

நன் னகரின் புறமெங்கும்
    மலர்க்காவும்,
நளினத்தடாகமும் நதியும்,
    வயல்களில்
கன்னலெனச் செழுஞ்செந்
  நெல் பொலிந்திடும்;
கன்னல்கள் யாவும் கமுகின்
    எழுந்திடும்;
மின்னிடையார் துடை காட்
    டும் காதலியும்,
மேனிய தகினைக் காட்டும்
    தளிர்மாவும்,
அன்னவர் கொங்கை யெழில்
    காட்டிள நீர்கள்
  அங்குறு தெங்கமும் எங்கும்
    நெருங்கிடும்
சோழநாட்டின் வளமை
    உனக்கு நான்
  சொல்லுவேன் கேளடி
    மானே

பிறகு குறத்தி மோகனவல்லியிடம் தான் பிறருக்குக் கை பார்த்துச் சொல்லிப் பெற்ற வரிசைகளை எடுத்துச் சொல்கிறாள். அவ்வாறு சொல்லும் பாட்டிலே, தெலுங்கப் பெண் "நாசெய் சூடு" என்றார்கள் என்றும் மராட்டிய மாது "மஜஹாத் பஹ ஆக" என்றாள் என்றும், கன்னடமாது "நனகையின நோடே" என்றாள் என்றும் மகம்மதியப்பெண் "மைஹாத் தேக்கர் பொலான்" என்றாள் என்றும் இங்கிலீஷ் மாது "லுக் மை ஹாண்ட்" என்றாள் என்றும் கொச்சைச் சொல்லால் அவ்வவர்களைப் போல நடித்துப் பேசுகிறதாகவுள்ள பகுதி ஹாஸ்ய ரஸமுடையதாகும்.

பிறகு குறத்தி குறிசொல்லத் தொடங்குகிறாள்; அதற்கு அங்கமாக அவள் முன் ஒரு முழச்சதுரம் சாணத்தால் மெழுகப்பட்டு, அங்கே ஒரு



மைசூரில் நடந்த முதலாவது ஸர்வதேச வாலிபர் (சாரணர்) முகாமுக்குப் பர்மா, சிலோன், இந்தியா, ஆஸ்திரேலியா முதலிய விடங்களிலிருந்து சென்னையில் வந்திறங்கிய பிரதிநிதிகளின் படம். பி. வி. எஸ்.

குத்து விளக்கு எற்றிவைக்கப்படுகின்றது. அதன் முன் மஞ்சளிலே விநாயகர், சந்தனம், பூ, அறுகுமுதலியவற்றுலே பூசிக்கப்படுகிறுர். அவருக்குக் கனிகள், பொரி, எள்ளுருண்டை, தேங்காய் முதலியன நிவேதிக்கப்படுகின்றன. வெற்றிலைபாக்கும் காட்டித் தந்தபின் சுவர்ண புஷ்பமாக ஒரு பொற்காசு வைக்கப்படுகிறது. தூபதீபார்ச்சனைகள் ஆனபின் மதனவல்லி விநாயகரை வணங்கிக் குறியாலேயறிய வேண்டியதை மனதிலே நினைத்துக்கொள்கிறுள். பிறகு, குறத்திக்கு ஒரு சிறங்கைக் கஞ்சி வார்த்துப் பிள்ளையார்க்குப் படைத்ததையும் கந்தனுக்கென்று படைத்த தினைமாவையும் நிறை நாழி நெல்லையும் எடுத்துதவுகிறுள்.

இந்த வகையெலாம் எங்கட்கு
ஈந்திடுதல் அம்மே !—பாரில்
எங்குமுள்ள முறைமையதாம்
இன்றைக்கல்ல அம்மே !

என்று கூறி இவற்றையெல்லாம் வாரிப் பெற்றுக் கொண்ட குறத்தி,

சுந்தரமார் நின் கையை
நீட்டுமுன் அம்மே:—குறி
சொல்லு சொல் என்று
ஆந்தை பல் கால்
சொல்லுதல்காண்! அம்மே!
சந்ததமும் செம்பொன் மழை
பொழிந்து மகிழ்ந்தம்மே
—நாளும்
தஞ்சையில் வாழ் சரப மன்னன்
அருள் உனக்கு உண்டு,
அம்மே!

என்று சுருக்கமாகக் கூறிய பின் இது வச்சிர ரேகை, இது மகுட ரேகை, இது சூல ரேகை, இது சக்கர ரேகை, இது குல ரேகை, இது கண்ட ரேகை, இது சங்க ரேகை, இது வாணி ரேகை என்று ரேகைகளை எடுத்துக் காட்டி அவற்றின் நற் பலன்களைக் கூறியும் அங்கங்களிற் காணப்படும் வலஞ்சுழி, தழும்பு, மறு மச்சங்களையும்கவனித்து, குற தெய்வங்களை வேண்டிக் கொண்டு, விரிவாகக் குறி சொல்லுகிறுள்.

கன்னிகையே ! சிற்றிடையே !
பைங்கிளியே ! மேலுன்
கருத்திலொரு கவலையுண்டு;
அது
உரைத்திடுவேன்; அம்மே !
துன்னுமத யானைமேல் ஓர்
மன்னவன் தான் சேனை
சூழநெடு வீதிதனில்
தோகையர்களுடன் நீ
மன்னி விளையாடிடுங்கால்
பவனி வந்தான் வந்த
மதயானைதனைக்கண்டு
மருண்டனை நீ, அம்மே !

என்று குறத்தி கூறவும் மதனவல்லி, "குறத்தி, நீ நேராகக் குறி சொல்லமாட்டாயோ? நான் மதயானையைக் கண்டா மருண்டேன்?

"மதயானை கண்டவரை
மதியமும் காய்ந்திடுமோ?
இன் நிலவு சீறிடுமோ ?
சிலைமதனன் போருக்கு
இசைந்திடுமோ? பாலமுது
கசந்து விடுமோடீ?"

குறி சொல்வோருக்குக் குறி கேட்போர் தங்களையறியாமலே குறியின் விஷயத்தைச் சொல்லிக்குறி சொல்லுவதை எளிதாக்குவார் என்னும் உலக வழக்கத்தை இவ்வாறு இப்புலவர் அழகாகக் குறித்துள்ளார்.

குறத்தி உடனே உள்ளதை அப்படியே உரைத்தால் நீ கோபித்துக்கொள்வாய்என்று மறைத்துரைத்தேன் என்று வெகு சாமர்த்தியமாகப் பேசி,

"உள்ளபடி சொல்லுகிறேன்.
பெண்ணரசே! அந்த
ஒங்குமத யானையின் மேல்
ஆங்கு இருந்து இசைந்த
வள்ளலினைக் கண்டு உளத்
தில்
ஆசை கொண்டாய்; கொண்ட
வண்மையினுல் நண்ணியது
இவ்
வுண்மயக்கம், அம்மே!"

என்கிறுள்.

அதற்குள் மதனவல்லி,

"குஞ்சரத்தில் எவரேனும்
ஏறிச்சென்றுல் ஆசை
கொள்ளுவனே? அப்படி நீ
கண்டதுண்டோ? சொல்லு
வஞ்சி! இங்கே வாய்த்துடுக்
கால்
மிஞ்சிப் பேசாதென்றும்;
மற்றவன் தான் எந்தவூரன்
அவன்பேர் என்னேடி?"

என்று அவசரப்படுகிறுள்.

அதற்குக் குறத்தி "குறி சொல்வது நான் அல்ல; எக்கலாதேவி என் கருத்திருந்து உரைக்கிறுள், கேளம்மே!

"தஞ்சை நகர்தனில் வாழ்
வோன்,
உலகத்தை ஆள்வோன்,
சரபோஜி மன்னவனும்
அன்னவன் பேர், அம்மே!
நிறை செல்வத்து அன்னவன்
மேல்
ஆசை கொள்ள நோற்று
நீ முன்பு செய்ததொரு
புண்ணியம் காண்பாயே;
பிறை நுதலாய்! இனி எனக்கு
நீ மறைக்கவேண்டாம்;
பெருவுடையார் அருளதனுல்
அவனைச் சேர்வாயே;
"நறை மலர்த் தாருடன்
தூது வந்திடும் இன்று"
என்ன
நவின்றனள்; அம்மதனவல்லி
நாணுடனே கேட்டாள்.

பிறகு சிங்கனும் குறவனும் சிங்கியாகிய குறத்தியைத் தேடிக்கொண்டு வருவதும், அவர்கள் குறத்தியைக் காண்பதும் சிங்கனும் சிங்கியும் வாதாடுவதும் ஹாஸ்யச் சுவை ததும்பும் பாகங்களாகும்.

பிறகு நாடக பாத்திரங்களாக நடித்தவர்களெல்லாம் கூடி அரசனை வாழ்த்தி மங்களம் பாடுவதாக நூல் முடிகின்றது.

# தேனீப்பகுதி

(ஸ்ரீமான் ஆர். ஜானகிராமன் எழுதியது.)

தேனீத் தொழிலில் லாபம்.

இப் பகுதியை ஆரம்பித்த பிறகு நேயர்கள் பலர் எனது விலாசம் தெரியாமல் சுதேசமித்திரன் ஆபீசுக்கு எழுதி எனது விலாசத்தைக் கண்டறிந்து எனக்குப் பல கடிதங்கள் எழுதியிருக்கின்றனர். அவர்கள் கேள்விகளுக்கு என்னாலியன்றவரை பதிலும் எழுதியிருக்கிறேன். இன்னும் ஏதாவது தெரிந்து கொள்ள விரும்புவோருக்கும் பதில்கொடுக்கத் தயாராக இருக்கிறேன்.

நேயர்களில் சிலர் கேட்டுள்ள கேள்விகளில் ஒன்று மிகவும் முக்கியமானது. அதாவது இத்தொழிலில் என்ன லாபம் கிடைக்கும் என்பது. எனது கணக்குகளைப் புரட்டி ஒருவிதமான குறிப்புகள் தயார் செய்து கொண்டு பார்த்துப் பின்வரும் விஷயங்களை அநுமானிக்கிறேன்.

இன்னொரு விஷயம் மறுமுறையும் சொல்ல விரும்புகிறேன். இடம், காலம், தேசம் வர்த்தமானம் என்று நாம் அடிக்கடிச் சொல்லும்படியாக, பல காரணங்கள் தேனீத் தொழில் அபிவிருத்திக்குக் காரண பூதங்களாக அமையும். ஆதலால், நான் எனது அனுபவத்தில் கண்டு கொடுக்கக்கூடிய கணக்கையே மூலாதாரமாகக் கொண்டு இத்தொழில் லாபகரமானது அல்லது லாபகரமானதல்ல என்று சொல்லுவது உசிதமல்ல. பூசா இம்பீரியல் என்டமாலஜிஸ்ட் (பூச்சி சாஸ்திரி) சொல்லுவதாவது. தேனீக்கூடுகளில்கிடைக்கக்கூடிய தேனைப் பற்றி பூசாவில் நாங்கள் கண்டறிந்தபடி அடுக்குத் தேனீ வருஷத்திற்கு ஒவ்வொரு கூட்டிலிருந்தும் 6 ராத்தல் கொடுக்கிறது. வட இந்தியாவில் உள்ள மலைப்பிரதேசங்களில் அதாவது குளிர்காலம் என்று பிரத்தியேகமாய் அமைந்துள்ள இடங்களில் 30 முதல் 40 ராத்தல் கிடைக்கும். இவ்வளவு வித்தியாசம் இடத்தைப் பொறுத்து அமைந்திருப்பதால், நேயர்கள் மிகவும் கவனமாக மற்றவர் சொல்லுவதை ஏற்றுக்கொள்ளவேண்டும்.

எனது அனுமானம் தேனீத் தொழில் செய்பவர் ஒவ்வொருவரும், பிறர் உதவியின்றித் தொழில் செய்யும்போது 50 கூடுகளைப்பார்த்துக் கொள்ளலாம். இந்த 50 கூடுகளுக்கும், விலை எல்லாம் உள்பட 250 ரூபாய் ஆகும் என்று வைத்துக்கொள்வோம். கூடுவைத்து, 6 மாதங்களாவது கழிந்த பின்னரே தேன் எடுக்க முடியும். ஒவ்வொரு கூட்டிலும் என் கணக்குப்படி $12\frac{1}{2}$ ராத்தல் தேன் வருஷத்திற்குக் கிடைக்கிறது. தற்சமயம் தேன் ராத்தல் ஒன்று $1\frac{1}{2}$ ரூபாய் விலையாவதால், ஒவ்வொரு கூட்டிலிருந்தும் வருஷத்திற்கு 18 ரூபாயாவது கிடைக்கும். 50 கூடுகள் வைத்திருந்தால் சராசரி மாதம்ஒன்றுக்கு செலவுபோக 50 ரூபாய்க்குக் குறையாமல் கிடைக்கும் என்று சொல்லத் துணிகிறேன் இந்த 50 கூடுகளுக்கும் செலவோ பல வருஷங்களில்தான் போடப்படுகிறது. இது கஷ்டமாகத் தோன்றுது தேனுக்கு மட்டும் கிடைக்கக்கூடிய லாபத்தை நான் கணக்கெடுத் தேனேயொழிய, பெட்டிகள், கூடுகள், மற்றவர்களுக்குக் கற்றுக்கொடுப்பது முதலிய விஷயங்களை நான் கணக்கெடுக்கவில்லை. கூடுகள் பல விற்றும் மற்றவர்களுக்குத் தொழில் கற்றுக் கொடுத்தும் இருக்கிறேன். ஆதலால் எவ்வளவோ பணச் செலவு செய்து முன்பின் பட்டங்கள் பெற்று உத்தியோகமின்றி உழன்று திரியும் இளைஞர்களைக் காட்டிலும் அல்லது குமாஸ்தா வேலை செய்து மாதம் 35 ரூபாய் (இனிமேல் ரூ. 30) கூட கிடைப்பதற்குக் கஷ்டப்படும் பெரியோர்களைக் காட்டிலும் தேனீத் தொழில் செய்வோருக்கு அதிக லாபம் உண்டு. ஆனால் இத்தொழில் செய்வோர் டாம்பீகமாக மற்ற வியாபாரம் செய்வோரைப்போல் தற்சமயம் உள்ள ஈக்களைக்கொண்டு இருக்க முடியாதுதான்.

"ஆமாம், ஏராளமான தேன் உண்டானால் அதை விற்பதற்கு வழி என்ன?" என்று சிலர் என்னைக் கேட்கிறார்கள். இக்கேள்விக்குப் பதில் சென்ற 27-10-32 தேதியன்று வெளியாகிய "ஹிந்து" தினசரிப் பத்திரிகையில் எபியரியன் என்று பெயர் பூண்டு எழுதியிருப்பவரின் வியாசத்திலிருக்கிறது. அவர் இந்தியாவில் இறக்குமதியாகும் தேனின் அளவையும் கணக்கெடுத்துக் கொண்டிருக்கிறாராம். அவர் இவ்விஷயத்தைக் கூடியசீக்கிரம் பிரசுரித்தாரானால் மிகவும் சௌகரியமாகவிருக்கும்.

"பெண்கள் இத்தொழில் செய்யமுடியுமா?" என்று ஒருவர் என்னைக் கேட்கிறார். ஏன செய்யமுடியாது? மேநாடுகளில் எவ்வளவோ பெண்கள் சில பெட்டிகளைத் தம் வீட்டில் வைத்துக்கொண்டு வீட்டுச் செலவிற்குச் சப்ளை செய்கிறார்களாம். நம் பெண்மணிகள் அவர்களைக் காட்டிலும் குறைவடைந்தவர்களா! ஆனால், எல்லாவற்றிற்கும் மனதுதானே காரணம்! இதைப் படிப்போரைத் துன்பப்படுத்துவதாக எண்ணவில்லை—ஆனால் ஒரு சந்தேகம் மட்டும் வந்து விட்டது. எனக்கு விவரம் வந்த நாள் முதல் கைராட்டையைப் பற்றிப் பலர் புகழ்வதையும் ஏழைக்குடும்பங்களை எப்படி இந்த ராட்டை துன்பத்திலிருந்து விலக்கும் என்றும் படித்தும் கேட்டும் இருக்கிறேன் ஆனால், எவ்வளவு பெண்கள் தங்கள் உற்றார் உறவினராகிய ஆண்கள் எவ்வளவோ கஷ்டப்பட்டுப் பணம் சம்பாதிப்பதைப் பார்த்து மனமிரங்கி, மத்தியான வேளையில் அசல் வீட்டில் வம்பளப்பதை விடுத்து, ஒருநாளுக்கு அரைமணி நேரமாவது ராட்டை சுற்றுகிறார்கள்? மனது தானே காரணம்?



பம்பாய் உமார்க்காதியில் உள்ள யுவதி சாலையத்திற்கு லேடி வில்லிங்டன் சமீபத்தில் விஜயம் செய்தபோது எடுத்த படம். லேடி வில்லிங்டனுக்கு இடது பக்கத்தில் பம்பாய் ஸ்திரீகள் சங்கத் தலைவர் மிஸஸ் சிரூரும் வலதுபக்கத்தில் லேடி சைக்ஸூம் இருக்கின்றனர். பி. பி. ஏ.

இந்தியாவில் ஏன் இத்தொழில் விருத்தியாகவில்லை என்று கேட்டால் காரணங்களைக் கீழே சொல்லுகிறேன்:—

1. பிரசாரம் செய்வதற்கும் புத்திமதி அளிப்பதற்கும் ஆளில்லாமை

2. பெட்டி, கூடு முதலியன தயார் செய்து கொடுப்பதற்கு ஆளில்லாமை

3. ஜனங்களின் அசிரத்தை.

மூன்றாவது காரணத்தை விளக்க நம்மைப் படைத்தவன் தான் வரவேண்டும். சிலவாரங்களுக்குமுன் செயின்ட்நிஹால் ஸிங்கு, லாலா லஜபதிராயைப் பற்றி ஹிந்துப் பத்திரிகையில் எழுதியிருந்த வியாசத்தில், ஏதோ ஒரு சமயம் லாலா லஜபதிராய் தம்மிடம் "மதம் என்று சாதாரணமாக வழங்கப்படும் விஷயமே இந்தியாவைக் கெடுத்து விட்டது" என்றாராம். எல்லாவற்றிற்கும் கடவுள் இருக்கிறார். இலையில் போட்டிருக்கும் சோறு வயிற்றில் போவதற்குக்கூடக் கடவுளே நின்று காரியத்தை முடித்து விடுவார்!

மேற்சொன்ன முதல் காரணத்தை நிவர்த்தி செய்வதற்குப் போதுமான ஆட்கள் இல்லை. கோயமுத்தூர் ஜில்லா ராமநாதபுரம் கிராமச் சீரமைப்பு ஸ்தலக் காரியதரிசியாகிய ஸ்ரீமான் ஐயகரன் பிள்ளை இவ்விஷயத்தில் ஈடுபட்டு உழைப்பது மிகவும் போற்றத்தக்கதாகும். எவ்வளவோ இடையூறுகளையும் புறக்கணித்து நமது ராஜதானியல்ல; பரோடா, ஹைதராபாத் முதலிய எல்லா விடங்களில் அவர் இத்தொழிலைப் பரவச் செய்து, கிராமவாசிகள் எவ்வளவு லாபகரமாக இத்தொழிலைச் செய்யலாம் என்றும் நிரூபித்திருக்கிறார். எனக்கும் இத்தொழிலைக் கற்றுக் கொடுத்தவர் அன்னவரேயாவர். எனக்குச் செய்த பேருதவிக்கு எனது மனமார்ந்த வந்தனத்தை இன்றல்ல; எப்பொழுதும் செலுத்தக் கடவேன்.

மேற்சொன்ன இரண்டாவது காரணத்தையொழிக்க நாம் ஐக்கியமாக ஒத்துழைத்தால் தான் முடியும். ஈசாக்கள், பெட்டிகள், தேனெடுக்கும் யந்திரம் முதலியன தனித்தனியே செய்வதென்றால் முடியாத காரியம். இக்காரணங் கொண்டே ஒரு ஐக்கியச் சங்கம் தேவை என்று கருத வேண்டியிருக்கிறது. மேனாடுகளில் தேனீத் தொழில் அபிவிருத்திக்காக ஏற்பட்டிருக்கும் சங்கங்களைப் பற்றிச் சுருக்கமாகச் சொல்ல விரும்புகிறேன்.

மேநாடுகளில் உள்ள இச்சங்கங்களின் வேலையைமூன்று பாகமாகப் பகுக்கலாம். (1) தேனை ரகவாரியாகப் பிரித்தெடுத்து, புட்டிகளிலோ

வேறெந்தப் பாண்டங்களிலோ போட்டு, வியாபாரத்திற்குத் தயார்செய்தல் (2) வியாபாரம் செய்தல் (3) வியாபார வர்த்தமானம், முதலியன வெளியிடுதலும், பிரசாரம் செய்தலும்.

(1) வியாபாரச் சரக்குகளை ஒரே ரகங்களாகப் பிரித்தெடுப்பதில் அதிகப் பிரயோஜனமிருக்கிறது. கொடுப்பவருக்கும் வாங்குபவருக்கும் ஒரு நம்பிக்கையுண்டு பண்ணுவதுடன் விலைரகம் முதலியன தீர்மானிப்பதிலும், எந்தெந்த இடத்திற்கு எந்தெந்த ரகம் தேவையாயிருக்கிறது என்று கண்டறிந்து அதன் பிரகாரம் நம் சரக்குகளை ஏற்றுமதி செய்வதிலும், மேற்சொன்ன ரகப்பாகுபாடு மிகவும் அநுகூலமாயிருக்கிறது.

யுனைடெட் ஸ்டேட்ஸில் 1927-ம் வருஷம் சில முக்கியமான ரகங்களின் பெயரைக் கவர்ன்மெண்டாரே உண்டாக்க, தேனீத்தொழில் செய்வோர், தாமே இப்பெயர்களைத் தம் தேனுக்கு வைத்துக் கொள்கிறார்கள். பெயர்கள் சரியாய் உபயோகப்படுகின்றனவா என்று அடிக்கடி அதற்கென்று ஏற்படுத்தப்பட்ட சர்க்கார் உத்யோகஸ்தர்களால் பரிசோதிக்கப்பட்டு, பரிசோதனைக் கூலியும் விதிக்கப்படுகிறது.

நியூஸிலண்டில்சட்டப்படிச் சிலவந்தமான தேனே ஏற்றுமதிசெய்யப்படும். ஏற்றுமதி ஆகவேண்டிய தேன், ரகவாரியாகப் பிரிப்பதற்காக ஏற்படுத்தப்படும் ஸர்க்கார் ஸ்டோருக்கு அனுப்பப்பட்டு, அங்கே அவைகளைப் பிரித்தெடுத்து, ஒரு சர்ட்டிபிகேட்டு தேன் அனுப்பினவருக்குக் கொடுக்கப்படும். பரிசோதனைக் கூலி ராத்தலுக்கு 1/10 பென்னி.

ஸ்விட்ஸர்லந்து தேசத்தில் ஜில்லாவாரியாகச் சங்கங்களும், மாகாண சங்கங்களும் ஏற்படுத்தப்பட்டு, இவைகளால் அனுப்பப்படும் பரிசோதனை உத்யோகஸ்தர்கள், ரகவாரியாகப் பிரித்தெடுக்கின்றனர்.

ஜெர்மனியில் உள்ள சங்கம், தேன்ஊற்றுவதற்கும். மேலே ஒட்டுவதற்கான பில்லைகள் (லேபில்கள்) முதலிய எல்லாச் சாமான்களையும் ஸப்ளை செய்வதோடு தேனைப்பிரித்தும் எடுக்கிறது.

இம்மாதிரியான முறை அநுசரிக்கப்படுவதால் தான் அத்தேசங்களின் தேன் வெளியூர்களில் முக்கியமாகக் கொண்டாடப்பட்டுத்தொழிலும் நன்கு அபிவிருத்தியாகிறது.

(2) வியாபாரத்திற்கென்று ஏற்பட்டிருக்கும் முறைகள் இன்னும் அநுகூலமாகவே இருக்கின்றன. மேனாடுகளில் தற்காலத்தில் வியாபாரம் செய்வதற்குஐக்யச்சங்கங்களை ஏற்படுத்திக்கொண்டு, இச்சங்கத்தின் மெம்பர்கள் தம் சரக்குகளைக் குறிப்பிட்ட ஒரு இடத்தில் கொண்டு வந்து இறக்கி, ரகவாரியாகப் பிரித்து, இச்சங்கமே அச் சரக்குகளை வியாபாரம் செய்து கொடுக்கிறது. இவ்வழியால் ஒருவருக்கொருவர் போட்டியும் அதனால் விலையும் சரக்கின் குணமும் குறைவுபடாமல், சரக்குகளைக் கொணருவோர்க்கு மெத்த லாபமும் கிடைக்கிறது. இம்மாதிரியான முறை யுனைடெட்ஸ்டேட்ஸில் வெகு மும்முரமாக நடக்கிறதாம்.

நியூஸிலண்டு தேசத்தில் தேனீத் தொழில் செய்வோரால் ஒரு லிமிடெட் கம்பெனி ஏற்படுத்தப்பட்டு, இந்தக் கம்பெனியைத் தவிர வேறு யாரும் தேன் ஏற்றுமதி செய்யக் கூடாதென்று சட்டமும் உண்டாக்கப்பட்டு, இங்கிலாந்தில் இக் கம்பெனியின் உத்யோகஸ்தரே ஒருவர் தம் நாட்டுத் தேனை வியாபாரம் செய்வதற்கென்று பிரத்யேகமாக நியமிக்கப்பட்டு, சென்ற 1929-ம் வருஷம் சுமார் 18,00,000 ராத்தல் தேன் இங்கிலாந்திற்கு ஏற்றுமதியாக்கப்பட்டிருக்கிறது.

யுனைடெட்ஸ்டேட்ஸிலும் இம்மாதிரி பல சங்கங்கள் ஏற்படுத்தப்பட்டு சென்ற 1929ம்வருஷம்26,00.000 ராத்தல் தேன் இங்கிலாந்திற்கு ஏற்றுமதியாக்கப்பட்டிருக்கிறது.

ஸ்விட்ஸர்லண்டு தேசத்தில் உள்ள சங்கம் வாஸ்தவமாக விற்பனை செய்வதில்லை. ஆனால், அதன் மெம்பர்களிடமிருந்து அடிக்கடி அவர்களிடமுள்ள தேனின் அளவும் ரகமும் தெரிவிக்கப்படும். தேன் வேண்டுவோர் இச்சங்கத்துக்குத் தெரியப்படுத்தி, இச்சங்கம் யாரிடம் அவர்கள் கேட்குமளவு தேனும் ரகமும் இருக்கிறதோ அவருக்குத் தெரியப்படுத்தி, அன்னவர் நேராகத் தேன் வேண்டுவோருக்கு அனுப்பி விடுவர். இச்சங்கம் தங்கியாபீஸ் போலும்.

(3) வியாபார வர்த்தமானங்களைத் தெரியப்படுத்துவதில் யுனைடெட்ஸ்டேட்ஸ் தான் முதன்மையாக இருக்கிறது. விவசாய டிபார்ட்மெண்டார் மாதந்தோறும் வெளியிடும் பிரசுரங்களில், மற்ற நாடுகளிலும் தம் நாட்டில் உள்ள ஜில்லாக்களிலும் இருக்கும் வியாபார நிலையையும், சரக்குகளின் உற்பத்தியையும், எந்தெந்த நாட்டிற்கு எந்தெந்த சரக்குகள் என்ன விலைக்குப் போகிறது என்றும் எங்கே எந்த ஜாதி சரக்கு தேவையாயிருக்கிறதென்றும், எங்கே எச் சரக்கை இன்னமாதிரி தயார் செய்து அனுப்பினால் வியாபாரமாகும் என்றும் இம்மாதிரி பல சமாசாரங்களையும் தெரியப்படுத்துகிறார்கள். இது மெத்தப் பிரயோஜனமாயிருக்கிறது.

இங்கிலாந்தில் உள்ள நியூஜீலண்டு தேன் உத்யோகஸ்தர் தம் சரக்கு வியாபாரமாவதற்கு வெகு விநோதமாகவும், சிறப்பாகவும், காரியம் பலிக்கும்படியாகவும், பிரசாரம் செய்து, தேன் வாங்குவோரை நியூஜீலண்டு தேனையே வாங்கும்படி ஏற்பாடு செய்கிறாராம்.

நம் நாட்டிலோ ஐக்கிய நாணயச் சங்கங்களைக் கட்டிக்கொண்டு அழுகிறார்களேயொழிய சரக்கு விற்பனைக்கென்று சங்கங்கள் ஏற்படுத்துவதில்லை. இரண்டு விதமான சங்கங்களும் ஒன்றுபட உழைத்தாலல்லவோ விவசாயிக்கு லாபம் கிடைக்கும். தேனீத் தொழில் இப்பொழுதுதான் தலையெடுப்பதால், இப்பொழுதே அத்தொழில் செய்வோர்ஒரு சங்கமுண்டாக்கிக் கொண்டு தம் தொழிலை விருத்தி செய்தால் தமக்கும் நம் நாட்டிற்கும் மிக்க நலமாயிருக்கும். மேலே சொல்லிய ஸ்விட்ஸெர்லண்டு தேச சங்கத்தைப்போல் தங்கியாபீஸ் போன்ற அச்சங்கம் இன்னின்ன இடத்தில் தேன் இருக்கிறது இந்தயிடத்திற்குத் தேன் வேண்டும் என்று கண்டறிந்து, இறக்குமதியையும் நிறுத்தி, அதைவிடக் குறைந்த விலைக்கு அதைவிட மேலான சரக்கை சப்ளை செய்தால் ஏன் இத்தொழில் விருத்தியாகாது? ஆனால் வேண்டுவது ஒன்றுதான்—ஐக்கியம். தற்காலத்தில் இந்தியாவில் ஏற்பட்டிருக்கும் விசேஷ உணர்ச்சியால் "இந்திய சரக்குகளை வாங்கவேண்டும்" என்ற கருத்து உண்டாகி, இதற்காக ஏற்படுத்தப்பட்டிருக்கும் கம்பெனிகளும் சங்கங்களும் வெகு மும்முரமாக வேலை செய்வதால் நம் தேனை வியாபாரம் செய்ய அவர்கள் சந்தோஷமாக முன் வருவார்களேயன்றி நம் தொழிலை நசிக்கிவிடுவார்கள் என்று கருதுவதற்கிடமில்லை. இது நான் எனது அநுபவத்தில் கண்டறிந்த விஷயம். ஆதலால் இதைப் படிப்போர் ஒவ்வொருவரையும் மிகவும் வணக்கமாக மன்றாடிக் கேட்டுக் கொள்ளுவது என்னவென்றால், "உம்மால் ஆன உதவியை இத்தொழில் அபிவிருத்திக்குச் செய்வீரா? நீரே ஆரம்பித்தால் உத்தமம். அல்லது ஆரம்பித்திருக்கும் சிறியோருக்கு உம்மாலான உதவியைச் செய்வீரா? நீர் ஆரம்பித்திருந்தால், உம்மைச்சுற்றி உம்மைப்போன்ற தொழிலைச் செய்துவரும் சிறியோர்களை ஒருங்கேசேர்த்து ஒருஐக்கியச் சங்கம் உண்டாக்க ஏற்பாடு செய்வீரா?"

இப்பகுதியை நான் எழுத முன் வந்தது, விரிவாக இத்தொழிலைப் பற்றி எழுதுவதற்கல்ல. ஆனால் இம்மாதிரியான தொழில் ஒன்றிருக்கிறது. அத்தொழிலை வெகு பணச்செலவின்றியும், அதிகத் துன்பமில்லாமலும், செய்யலாம் என்று தெரியப்படுத்துவதற்காகவே. இதைப் படிப்போருக்கு நாமும் இத்தொழில் செய்யவேண்டுமென்ற உணர்ச்சியை உண்டாக்கியிருந்தேனாகில், அதுவே எனக்குப் போதுமான கைம்மாறு என்று கருதுவேன். ஸ்ரீமான் நாதன் என்னும் பெரியோர், ஸ்காட்லண்டு முதலிய பல விடங்களுக்கும் சென்று, பழச்செடிகள் விருத்தியாக்குவதிலும், தேனீத் தொழில் செய்வதிலும் தேர்ச்சியடைந்து திரும்பி, குன்னூர் பழ அபிவிருத்தித் தோட்டத்திற்கு மானேஜராக நியமிக்கப்பட்டிருக்கிறார் என்று தெரிகிறது. அன்னவரால் நமக்குத் தேனீத்தொழில் செய்வதற்கு மெத்த உதவி கிடைக்கும் என்று நான் நம்புகிறேன்.

என்னால் என்ன உதவி செய்ய முடியுமோ அதைச் செய்ய எப்பொழுதும் தயாராகவிருக்கிறேன். என் விலாசத்திற்கு ஒரு கார்டு எழுதினால் போதுமானது. எனது விலாசம்:—

"356 திருச்சிரோட்,
ராமநாதபுரம் போஸ்டு,
கோயமுத்தூர்."

முற்றிற்று.

நமது தோடர் கதை

## விதியின் விளையாட்டுகள் ?

(மௌனக்கல்யன் எழுதியது.)

[முந்திய வாரங்களில் வேளியானதன் சுருக்கம்:—திருநெல்வேலி ஜில்லாவில் ஒரு கிராமத்தில் கோமதிஎன்ற 16 வயதுப் பெண் தன் புருஷன் சிதம்பரநாதனுக்கு ஏதோ பெரிய அபாயம் நேரிடுவதுபோல் கனவு கண்டு நடுங்குகிருள். மறுநாள் சென்னையில் சிதம்பரநாதன் கொலைக் குற்றத்திற்காகக் கைதுசெய்யப்பட்டிருப்பதாகத் தந்தி வரவே எல்லாரும் சென்னைக்குப் போகின்றனர். சிதம்பரநாதனுடன் வியாபாரத்தில் கூட்டாளியாக விருந்த பரமசிவம் பிள்ளை கம்பெனிப் பணத்தைக் கையாடி விடவே சிதம்பரநாதன் அவனைத் தேடி யழைத்துக்கொண்டு திருவல்லிக்கேணிக் கடற்கரைக்குப் போகிருன். மறுநாள் கூவம் ஆற்றிலிருந்து அகப்பட்ட பிரேதம் பரமசிவம் பிள்ளையின்சரீரமென்றும் சிதம்பரநாதன் ஆத்திரத்தில் அவனைக் கொன்றுவிட்டதாயும் போலீஸார் அவன்மீது குற்றம் சுமத்திக் கைதி செய்து வழக்கு நடத்துகிருர்கள்.]

அப்பொழுது அவர் "துரோஹி! அவன் இன்னம் வரவில்லையா! என் வருவான்? சிதம்பரநாதன் பணமிருக்கிறது எங்கேயாவது தேவடியாள் வீட்டில் குடித்துவிட்டுக் குதிரைப் பந்தயக் காயிதம் பார்த்துக்கொண்டிருப்பான்; இருக்கட்டும்; அவனை இலகுவில் விடப்போகிறேனு!'' என்று சொன்னுர்.

அதன் பின்னர் அவர் நேராகப் பரமசிவம் பிள்ளை வீட்டிற்குச் சென்றிருக்கிருர். அவர் வீட்டிலில்லாமையால், வெளியே சென்று விட்டு மறுபடியும் வந்தார். அப்பொழுதுதான் பரமசிவம் பிள்ளை வெளியேயிருந்து வீட்டிற்கு வந்திருந்தார். இருவரும் புறப்பட்டுச் சென்றனர். வழியில் இருவரும் காப்பி சாப்பிட்டனர். அங்கிருந்து இருவரும் திருவல்லிக்கேணிக் கடற்கரைக்குச் சென்றனர்.

அங்கு இருவரும் கூவம் ஆறு கடலுடன் கலக்குமிடத் தருகில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தனர். அப்பொழுது அங்கு தற்செயலாகச் சென்ற சரவண முதலியார் என்பவர், சிதம்பரநாதன், நிரம்பவும் கோபமாகப்பேசிய சில வார்த்தைகளைக் கேட்டார் "உனது முகாவலோபனம் கூடப் பாவம். உன்போன்றவர்கள் உயிருடனிருப்பதால்.....................தான் ஆபத்து. சீ! சமாதானம் சொல்லவும் மன்னிப்புக் கேட்கவும் உன் மனம் கூசவில்லையா?'' என்ற வார்த்தைகள் அவருடைய காதில் விழுந்தன.

இருவரும் அதேயிடத்தில் இருந்ததை இரவு எழரை மணிக்கு ஒருவர் கண்டிருக்கிருர்.

இரவு எட்டேகால் மணிக்கு சிதம்பரநாதன் வீட்டிற்குத் திரும்பி வந்தார். சாப்பாடு வேண்டாமென்று சொல்லி



இங்கிலாந்தில் டெர்பிஷயரில் ரஸ்தாவுக்கருகில் தங்கம்கலந்த கூழாங்கல் காணப்பட்டதாயும் இம்மணல் தென் ஆப்பிரிக்கா தங்கச் சுரங்கக் கூழாங்கற்களைப் போலிருப்பதாயும் கூறப்படுகிறது. பூமி சாஸ்திர நிபுணர் ஒருவர் பாறையிலிருந்து கற்களை பெயர்த்துச் சோதிப்பது படத்தில் காணப்படுகிறது. இ. என். பி.

விட்டு மேல்மாடியிலுள்ள தமது அறைக்குச் சென்றுவிட்டார். அங்கு அவர், தம்முடைய மைத்துனனுன ஷண்முகசுந்திரதத்திற்கு ஒரு கடிதம் எழுதியிருக்கிருர். (அந்தக் கடிதம் பதிவு செய்யப்பட்டது.)

மறுநாள் காலை எழு மணி சுமாருக்கு மீன் பிடிப்பவர்கள் சிலர், கூவமாற்றின் ஒரு கரையில் இரும்பு வாராவதிக் கடுத்துக் கொஞ்ச தூரத்தில், ஒரு பிணம் ஒதுக்கப்பட்டிருந்ததைக் கண்டனர். உடனே விஷயம் போலீஸாருக்கு அறிவிக்கப்பட்டது. அந்தப் பிணத்தைப் போலீஸார் எடுத்துச் சென்று பரிசோதனை செய்தனர். பிணத்தின் முகம் உருத் தெரியாதபடி அடிப்பட்டும், மீன்களால் கொத்தப்பட்டும் சிவந்திருந்தது. அந்தப் பிணத்தின்மேலிருந்த உடையில் சில, குதிரைப்பந்தய சம்பந்தமான காயிதங்களும், பரமசிவம் பிள்ளையின் டைரியும் இரண்டு மூன்று ரூபாய் சில்லரையும் அகப்பட்டன. அந்த டைரியினுதவியைக் கொண்டு போலீஸார் விசாரணை செய்தனர்.

பரமசிவம் பிள்ளையின் மனைவி, தன்னுடைய புருஷன், முந்தின நாள் மாலையில் சிதம்பரநாதப் பிள்ளையுடன் வெளியே சென்றவர் அதுவரை திரும்பி வரவில்லையென்று தெரிவித்தாள். அவள் வந்து நேரில் பார்த்தவுடன், அது தன்னுடைய கணவாது சரீரம்தானென்று அடையாளம் கண்டு பிடித்தாள். முகம் அடையாளம் தெரியாமல் குலைந்திருந்தாலும் மற்ற இரண்டொரு அடையாளங்களைக்கொண்டு, அது பரமசிவம்பிள்ளையின் சவமென்பதைப்பற்றிச் சந்தேகமேயில்லையென்றும், அதன் மீது காணப்பட்ட உடைகள் அவருடையவைதானென்றும் தெரிவித்தாள். பின்னர், பரமசிவம் பிள்ளையின் இரண்டு நண்பர்களும் அதை அடையாளம் கண்டு கூறினர்.

அந்த உளவைக்கொண்டு போலீஸார் மேலும் செய்த ஆராய்ச்சியில், சிதம்பரநாத பிள்ளை மேலேயே சந்தேகம் உதித்தது. அவரையுடனே கைது செய்து, அவருடைய வீட்டையும் கம்பெனியையும் சோதனை போட்டதில் மேற்குறித்த கடிதமும் கணக்கு விவரங்களும் கிடைத்தன.

பிணத்தைப் பரிசோதனை செய்த டாக்டர், அது கொலைதானென்றும், கொலை செய்தவர் முதலில், இறந்தவரைக் கழுத்தைப் பிடித்து நெறித்துவிட்டுப்பின்னர் முகத்தை அடையாளம் தெரியாதபடிச் சேதம் செய்திருக்க வேண்டுமென்றும், கொலைநடந்து பதினைந்து மணி நேரமாகியிருக்குமென்றும், அந்தச் சவத்தின் நிலையிலிருந்து, அது அவ்வளவு நேரம் தண்ணீரிலிருந்திருக்க வேண்டுமென்றும் அபிப்பிராயங் கொடுத்தார்.

போலீஸாருடைய அநுமானப்படி, சிதம்பரநாதபிள்ளை, பரமசிவம் பிள்ளையைப் பொங்கியெழுந்த ஆத்திரத்தில் கழுத்தைப் பிடித்து நெறித்துக் கொன்றுவிட்டார். பின்னர், தம்முடைய குற்றத்தை மறைக்க முயன்று, பிணத்தின் முகம் அடையாளம் தெரியாதபடிச் சேதம் செய்துவிட்டார். பிறகு, சவத்தை இழுத்து, சமுத்திரத்தில் போட்டு விட்டார். அன்றிரவு சமுத்திரம் பொங்கி அலையெழுந்ததில் சவம் கூவத்தினுள் ஒதுக்கப்பட்டுக் கரையினருகில் விடப்பட்டது என்று சிதம்பரநாதப் பிள்ளையின்மீது பரமசிவம் பிள்ளையைக் கொலை செய்ததாகக் குற்றம் சாட்டப்பட்டது.

சிதம்பரநாதபிள்ளை, ஷண்முக சுந்திரத்திற்கு எழுதியதாக ஆஜர் செய்யப்பட்ட கடிதம் கோர்ட்டில் வாசித்துக் காண்பிக்கப்பட்டது. அதில் பின் வருமாறு எழுதப் பட்டிருந்தது:—

சென்னை

19, ஏப்ரல் 16.

அன்புள்ள ஷண்முகம்,

இங்கே என்னுடைய மன நிம்மதியைக் கவிழ்க்கத்தக்க சம்பவங்கள் நடந்தேறியிருக்கின்றன. அந்தச் சம்பவத்திற்குப்பிறகு, என்னுடைய மனோநிலை, வரப் போகும் முகூர்த்தத்திற்குத் தகுந்ததாகவில்லை. அதை இன்னெரு தேதிக்குத் தள்ளிவைக்கலாமென்று நினைக்கிறேன். இடைக்காலத்தில் என்னுடைய நிலைமையைச் சரி செய்து கொள்ளவும்கூடும். இந்தச் செய்தியை நிரம்பவும் ஜாக்கிரதையாகவும் சாமர்த்தியமாகவும், உன்னுடைய தாய்க்கும் கோமதிக்கும் நீயே தெரிவிக்க வேண்டுமென்றும், அதைக் கேட்டு அவர்கள் பயந்துவிடக்கூடாதென்றும் இதை உனக்கு எழுதுகிறேன். தற்சமயம் எல்லாவற்றையும் விவரமாகத் தெரிவிக்கக் கூட

வில்லை. உனக்கு மறுபடியும் எழுதுகிறேன்.

உனது அன்புள்ள,
சிதம்பரம்.

வழக்கின் ஆரம்பத்தில், தான குற்றமற்றவனென்று சொன்னதைத்தவிர, சிதம்பரநாதன் ஒரு வாக்கு மூலமும் கொடுததான். அதில் சர்க்கார் தரப்பில் கொண்டு வரப்பட்டுள்ள விஷயங்கள் பெரும்பாலும் உண்மைதானென்றும், ஆனல், பரமசிவம்பிள்ளை ஏழரை மணிக்கே தன்னை விட்டுச் சென்றுவிட்டதாகவும், தான் அதன் பிறகு வீட்டிற்குச் சென்றதாகவும், உண்மையாகவே, தான் பரமசிவம் பிள்ளையைக் கொலை செய்யவில்லையென்றும் தெரிவித்தான்.

அவனுடைய வக்கீல், அதைப் பதிவு செய்துகொள்ளச் சொல்லிவிட்டு, தாம் மேலேயொன்றும் பேச விரும்பவில்லை யென்றும் செஷன்ஸ் கோர்ட்டில் பேசிக்கொள்வதாகவும் தெரிவித்து விட்டார். விசாரணை செய்த மாஜிஸ்ட்ரேட், சிதம்பரநாதன் மேல் குற்றப் பத்திரிகையெழுதி வழக்கை செஷன்ஸுக்குக் கமிட் செய்துவிட்டார்.

சிதம்பர நாதனுடைய வழக்கு செஷன்ஸ் கோர்ட்டில் விசாரணைக்கு வர மூன்று மாதங்கள் பிடித்தன. அவனுடைய வழக்கு கீழ் கோர்ட்டில் விசாரிக்கப்பட்டு, குற்றப் பத்திரிகை படிக்கப்பட்ட சில தினங்களுக்கெல்லாம், கோடைகால விடுமுறை வந்துவிட்டபடியால், மறுபடி கோர்ட்டுகள் திறக்கும்வரை அவன் விசாரணைக் கைதியாகச் சிறையிலேயே வைக்கப்பட்டிருந்தான்.

அந்த இடைக் காலத்தில் அவனைக் கோமதி முதலானோர் அடிக்கடிச் சென்று கண்டு வந்தனர். அவர்களைக் காணும் பொழுதெல்லாம் அவன் உற்சாகத்தையும் நம்பிக்கையையும் தோற்றுவித்துப் பேசியது அவனுக்கு நிரம்பவும் சிரமசாத்தியமான காரியமாகவேயிருந்தது. அவன் மேலும் மூன்று மாத காலம் வரை தான் சிறையிலேயே யிருக்க வேண்டுமென்று அறிந்தவுடன், தனது கம்பெனியின் மானேஜரான ராமச்சந்திரய்யரை வருவித்து, கம்பெனியின் வியாபார சம்பந்தமான சகல விவகாரங்களையும், ஷண்முகசுந்தரத்திற்குக் கற்றுக் கொடுத்து, அவனையே புதிய எஜமானுக ஏற்றுக் கொள்ளும்படித் திட்டம் செய்தான்.

நாள் செல்லச் செல்ல, அவர்களுடைய திகிலும் கவலையும் அதிகமாகிக் கொண்டே வந்தன. கோமதி ஒரே ஏக்கமாகத் தன்னை மறந்து உயிரற்ற பதுமைபோல மாறிக்கொண்டே வந்தாள். அவளுடைய நிலைமையைக் கண்டு சிங்காரம்மாள் நிரம்பவும் பயந்து விட்டாள். கடைசியாய் வக்கீல் பொன்னையா பிள்ளைக்கு ஷண்முக சுந்தரத்தைக் கொண்டு ஒரு கடிதம எழுதுவித்தாள். அதில் கோமதியின் நிலைமையை விளக்கி, அச்சமயம், அவர் பெரிய மனது செய்து, அவருடைய புதல்வி சிவகாமியை யனுப்பிவைக்க வேண்டுமென்றும், அவள் வந்தால் கோமதியையொருவாறு கவனித்துக் கொள்வாளென்றும் எழுதுவித்தாள்.

வக்கீல் பொன்னையா பிள்ளை அந்தக் குடும்பத்தினருக்கு வந்த விபத்தைக் கருதி, மனமிரங்கித் தம்மாலியன்ற உதவிகளைச் செய்ய ஆவலுள்ளவராகவிருந்தாராகையால் மறுநாளே சிவகாமியைத் தமது புதல்வனுடன் அனுப்பிவைத்தார்.

கோடைகால விடுமுறை கழிந்து செஷன்ஸ் ஆரம்பிக்கப்பட்டவுடன், சிதம்பரநாதனின் வழக்கு இரண்டாவதாக விசாரணைக்கு எடுத்துக் கொள்ளப்பட்டது. சர்க்கார் தரப்பில் கீழ்க்கோர்ட்டில் சொல்லிய விதமே குற்றம் சாட்டப்பட்டது. அதற்காக சாக்ஷிகளையும் அவர்கள் ஆஜர் செய்திருந்தனர். சிதம்பரநாதனுடைய வக்கீல் நிரம்பவும் திறமையாகக் குறுக்கு விசாரணைகள் செய்தார். ஆனல், சிதம்பரநாதன் நிரபராதிதானென்று ரூபிக்கப் போதுமான சாக்ஷியங்கள் அகப்படவில்லையாகையால், அவருடைய நம்பிக்கை குறைந்துபோய்விட்டது. சிதம்பரநாதனுடைய வாக்குமூலப்படி பரமசிவம்பிள்ளை, ஏழரை மணிக்குக் கடற்கரையிலிருந்து சென்றவர், எங்கு சென்ருர் என்பதை நிரூபிக்க அவர் செய்த முயற்சிகள் யாவும் வீணுபின. அவனுடைய நன்னடத்தையைப்பற்றி மாத்திரம் இரண்டொரு பிரபலஸ்தர்களைக்கொண்டு சாக்ஷி சொல்லச் செய்திருந்தார்.

சாக்ஷி விசாரணை முடிந்து வாதம் செய்யும் காலம் வந்தவுடன், அவர் தமது வாக்கு வன்மை முழுவதையும் உபயோகித்துச் சிதம்பரநாதன் குற்றமற்றவனென்று நிரூபிக்க முயன்ருர். தென்னுட்டில் நடந்த மற்ரெரு பிரபல கொலை வழக்கில் நடந்த தீர்ப்பை ஆதாரமாக எடுத்துக் காட்டி, இறந்தவர் பரமசிவம் பிள்ளையல்லாமலேயிருக்கக் கூடுமென்றும், அவ்வளவு சந்தேகாஸ்பதமான நிலைமையிலிருந்த பிணத்தைக்கொண்டு ஒரு நிரபராதியைத் தண்டித்துவிடுவது நியாயமல்லவென்றும் பேசினர். ஆனல் சர்க்கார் தரப்பு வாதம் நிரம்பவும் உறுதியானதாகவிருந்தது.

ஜூரர்களுடைய அபிப்பிராயம் கேட்கப்பட்டதில் அவர்கள் சிதம்பரநாதன் குற்றவாளிதானென்று அபிப்பிராயம் தெரிவித்தனர். அதைவற்றுக் கொண்டு செஷன்ஸ் ஜட்ஜ் சிதம்பரநாதனுக்கு பதினைன்கு வருஷக் கடுங்காவல் தண்டனை விதித்தார்.

கொலைக் குற்றத்திற்காகத் தண்டிக்கப்பட்டு அவன் சிறைக்கு அழைத்துச் செல்லப் பட்டபொழுது, அங்குதோன்றிய காக்ஷி கோர்ட்டிலிருந்தோர் யாவரையும் மனமுருகிக் கண்ணீர்விடச் செய்வதாயிருந்தது.

ஒரு வாரத்திற்குப் பின் கோமதி தனது தாயுடன் சென்று அவனைச் சிறையில் பேட்டி கண்டாள். அவளுடைய களங்கமற்ற காதலொன்றின் பலத்தாலேயே மனத்தைச் சிதறவிடாது வைத்துக்கொண்டிருந்த சிதம்பரநாதன், அவளைக் கண்டவுடன் மனந்தாளாது கண்ணீர் பெருக்கிவிட்டான். கொஞ்சநேரம்வரை இருவரும் மௌனமாக நின்றபின்னர் கோமதி, ''அத்தான் உங்களுடைய சொத்தையெல்லாம் என்பேரில் எழுதிப் பத்திரங்கள் தயார் செய்து வைத்துவிட்டீர்களாமே! ஏன்?' என்று வினவினுள்.

ஆஹா! என்ன தர்ம சங்கடம்! அந்தக் குழந்தையின் களங்கமற்ற மனம் அவனுடைய உட்கருத்தை எவ்வாறு அறியும்? அந்தப் பேதமைக் கேள்விக்கு என்ன பதிலளிப்பான்? தான் பதினைன்கு வருடங்கள் உயிருடனிருந்து அந்தத் தண்டனையையனுபவித்துவிட்டுத் திரும்பி வருவது என்ன நிச்சயம்?

அவனுல் பதில் சொல்ல முடியவில்லை. ''விசேஷமொன்றுமில்லை கோமதி; வக்கீல் அப்பீல் செய்வதாகச் சொல்லியிருக்கிருர். அப்பீலில் விடுதலையாகிவிடும் என்று அவர் தைரியமாகச் சொல்லுகிருர். ஆனல், அது முடிய எவ்வளவு நாள் செல்லுமோ? அதுவரை நீ கஷ்டப்படாமல்இருக்கவேண்டுமல்லவா?'' என்ருன்.

அதைக்கேட்ட கோமதி ''அப்பீலில் கட்டாயம்விட்டு விடுவார்களல்லவா? அத்தான் நிரபராதியென்பது எனக்கே தெரிகிறதே! அந்த ஜட்ஜுக்கு ஏன் அது தெரியவில்லை?'' என்று வினவினுள்.

அவளுடைய குழந்தைக் கேள்விக்கு என்னென்று பதில் சொல்லுவான் ?

அப்பீல் செய்யப் பட்டது. பிரசித்தி பெற்ற வக்கீலொருவரை சிதம்பரநாதனது கக்ஷிக்காக நியமித்தனர். ஆனல், துரதிருஷ்ட வசமாக அப்பீலில், கீழ்க் கோர்ட்டுத் தீர்ப்பே உறுதி செய்யப்பட்டு விட்டது. சந்தர்ப்ப சாக்ஷியங்களின் முக்கியத்துவத்தை நம்பும் நீதிமுறை அந்த நிரபராதியைக் குற்றவாளியென்று தீர்மானித்துத் தண்டித்து விட்டது.

அத்தியாயம் 4

'கவலைப்படாதிரு மனமே'

சிதம்பரநாதன் கொலைக் குற்றத்திற்காகப் பதினைன்கு வருஷத் தண்டனையடைந்த பின ஐந்து வருஷங்கள் கழிந்து விட்டன. அந்த ஐந்து வருஷத்தின் சரித்திரம் அவனுடைய மனத்தகத்தில் அவனுடைய ஜீவியகாலம் முழுவதும் மறக்க முடியாத துயரமும்துன்பமும்நிரம்பியதாயிருநதது. முதனமுதலாக அவன்தான் தண்டிக்கப்பட்டதை யுணர்ந்தவுடன் அந்தத் தீர்ப்பின் முழு அர்த்தமும் அவனுடைய மனத்தில பதியவில்லை. ஆனல் அவன் சிறைக்குள் அழைத்துச் செல்லப்பட்டு, ஒரு கைதியின் வாழ்க்கையை ஒரு நாள அனுபவித்த பின்னரே, தனது விதியின் கொடுமையை, அதன் பயங்கரத்தன்மையை உணர்ந்தான்.

ஆம்! சுதந்திரமற்ற அடிமையாய், பஞ்சக்கால்த்தின வாசனை நிரம்பிய உடை, உணவுகளுடன், கொடிய செய்கைகள் செய்து மனங் கடினமடைந்த இழிகுணம் படைத்த பலருக்கிடையில், பதினைன்கு வருஷகாலம், அவன் வாழவேண்டும! ஒரு கைதியாக, மனிதன் செய்யக்கூடிய மிகப் பாதகமான கொலையைச் செய்த குற்றவாளியாக அவன் தனது இளமையைக் கழிக்கவேண்டும்!

அநத உண்மை அவனுடைய மனதில் ஒரு கூறிய அம்பைப்போலப் பாய்ந்தது. அவனுடைய ஹிருதயத்தை ஒரு கொடிய மிருகம் தனது கூரிய நகங்களால் இறுக்கிப் பற்றுவது போலவிருந்தது.

மனிதன் நம்பிக்கையால் தான் உயிர் வாழ்கிருன். இன்று அல்லது நாளை அல்லது கட்டாயமாக ஒருநாள் தனது அபிலாஷைகள் பூர்த்தி பெறும்; தன்னுடைய கனவுகள் உண்மையாக மாறிவிடும். தனது துன்பங்கள் தீர்ந்துவிடும் என்ற நம்பிக்கையே மனிதனை இயக்குவிக்கின்றது.

(தொடரும்.)

## ராஜேச்வரி.

(1510-ம் பக்கத் தொடர்ச்சி.)

லீலா:—அம்மா, நான் இந்த இரவு நேரத்தில் தனிமையாக எங்கு போவேன்? தயவுசெய்து இரவு மட்டும் தங்க உத்தரவு கொடுங்கள்; காலையில் நான் போய் விடுகிறேன்.

கன:—தனிமையென்ன! ஒரு நிமிஷம்கூடத் தங்காமல் மரியாதையாய்ச் சென்று விடு.

'அப்படியே செல்கிறேன். அம்மா! ஒரு பாவமுமறியாத ஏழைச் சிறுமியை, நடு நிசியில் வெளியில் துரத்தும் பாவத்திற்குச் சீக்கிரம் கடவுளுக்குப் பதில சொல்ல நேரும்' என்று சொல்லி, வெகு விரைவாக அவ்விலலத்தை விட்டகன்றாள்.

மறுநாள் அவ்வீட்டில் லீலாவைக் காணாத சத்யநாதன், அவளைப்பற்றி விசாரித்து உண்மை தெரிந்து, தன்னால் அவளுக்கேற்பட்ட தீங்கை உணர்ந்து, மனம் வருந்தி, 'ஐயோ! அந்தச் சிறு பெண் இரவு நேரத்தில் எங்கு சென்று தவிக்கிறாளோ? அவளைத் தேடி அவளுக்கேற்பட்ட கஷ்டத்தைத் தவிர்க்க வேண்டும்'' என்று நினைத்தவனாய், அவளைத் தேடிச் சென்றான்.

இரண்டுநாளாயிற்று. ராகவப் பிரபு, கனகவல்லியைப் பார்த்து, 'நம் சத்யநாதன் எங்கே காணோம்?' என்றார். அதற்கு அவள், 'அவன் அந்த வேலைக்கார நாயைத் தேடிச் சென்றிருப்பான்!' என்று நடந்த விஷயங்களை ஒன்றிற்குப் பத்தாய்ப் பெருக்கிச் சொல்லி, 'நாதா! நான் சொன்னால் தங்களுக்குத் தவறாய்ப்படும் சத்யநாதன் கேவலம் அற்ப குணமுடையவன்: இல்லாவிட்டால் நம் குலத்தையும் அந்தஸ்தையும் மறந்து கேவலம் வேலைக்காரியின் மீது இச்சைகொள்வானோ?' என்றாள். அதற்கு ராகவப் பிரபு, 'கனகம்! நம சத்யநாதனின் குணமும், பெருந்தன்மையும் எனக்குத் தெரியும். அந்தப் பெண் நல்ல அழகும் குணமும் பொருந்தியவள் தான். ஆனாலும், நம் அந்தஸ்திற்குத் தகுந்தவிடத்தில் பெண்ணைத் தேடிச் சீக்கிரம் அவனுக்கு விவாகம் நடத்த வேண்டும். ஆயினும், நீ அந்தச் சிறுமியை இரவில் துரத்தியது மிகவும் தவறான காரியம்' என்று சொல்லி, வாய் மூடுமுன் அங்கு சத்யநாதன் திடீரென்று தோன்றி, 'மாமா! தங்கள் மனோபீஷ்டப்படி நான் ஓர் பெரிய ஜமீன்தாரின் ஏக புத்ரியைக் கண்டு காதலித்தேன்! அவளை மணக்கத் தாங்கள் அனுமதி கொடுக்கவேண்டும்!' என்று சிரித்த முகத்துடன் சொல்லி வணங்கினான்.

ராகவ:—என்ன, சத்யநாதா! இந்த இரண்டு நாளாக எங்கு சென்றிருந்தாய்? எனக்குத் தெரியாத எந்த ஜமீன்தார் வீட்டுப்பெண்ணைக் கண்டாய்? அப் பெண் தற்சமயம் எங்கிருக்கிறாள்?

சத்யநாதன் 'இதோ இருக்கிறாள் அந்தப் பெண்!' என்று சொல்லி மறைந்து நின்றிருந்த லீலாவை வெளியே இழுத்து வந்தான்.

ராகவ.—அடடா, பேஷ்! கடைசியில் இந்த வேலைக்காரப் பெண்ணின்மீது தானா காதல் கொண்டாய்? தவிர, என்னிடமே எதற்காகப் பொய் சொன்னாய்?

சத்:—மாமா, நான் தங்களிடம் பொய் சொல்வேனா? இப்பெண் சிலநாள் நம் வீட்டில் காலகதியால் வேலை செய்தாலும் இவள் ஓர் ஜமீன்தாரின் மகள் தான்! மேலும், எனக்குக்கூடப் பந்துத்வமுடையவள்.

ராக:—என்னடா என்னிடமே விளையாடுகிறாய்? எனக்குத் தெரியாத உன்னுடைய பந்துக்களாவது ஜமீன்தாராவது யாரிருக்கிறார்கள்?

சத்ய:—அவள் என் சொந்த அம்மான் மகள்.

ராக:—என்ன, என்னைத் தவிர உனக்கு வேறொரு அம்மான் இருக்கிறானா என்ன?

சத்:—மாமா இன்னும் தங்களுக்குத் தெரியவில்லையா? இவள் தங்கள் மகளல்லவா?

ராக:—என்ன சொன்னாய்? இவள் என் மகள் ராஜேச்வரியா? இது உண்மைதானா? நீ எப்படிக் கண்டு பிடித்தாய் என்றார்.

'எஜமானே! இன்னும் தங்களுக்குச் சந்தேகமிருந்தால் அவள் இடது கையிலுள்ள அழகிய மருவைப் பாருங்கள், உண்மை விளங்கும்!' என்று சொல்லி ஓர் ஸதிரீ அங்கு வந்து நின்றாள். அவளைப் பார்த்த பிரபு, 'நீ இவ்விடத்திலிருந்து விலகிய பழைய வேலைக்காரி செல்லம் அல்லவா? உனக்கெப்படித் தெரியும்?' என்றார். அதற்கு அவள் அவர் பாதத்தில்விழுந்து, 'என் ஆண்டவனே, நான சொல்லப் போகும் விஷயங்களைக் கேட்டு, என்னைத் தண்டித்தாலும் சரி; ரக்ஷித்தாலும் சரி; தங்கள் முதல் மனைவிக்குக் குழந்தை இல்லாததால் இந்தம்மாளை மணந்ததும், பெரிய எஜமானி கர்ப்பமாகி ஓர் பெண் குழந்தையையீன்றதிலிருந்து, அக்குழந்தை மீதும, அதன் தாய் மீதும் பொறாமை கொண்ட சின்ன எஜமானி, அக்குழந்தையைக் கொல்ல என்னிடம் யோசனை கேட்டாள். அதற்கு நான் ஒப்பாததால் அவர்களை வீட்டை விட்டுத் துரத்த எண்ணம் கொண்டு, தனக்கு பெரியம்மாள் விஷம்கொடுக்க யத்தனித்தாள் என்று வீண் பழியைச் சுமத்தி, என்னையும் பொய் சாக்ஷி சொல்லும்படித் தூண்டினாள். பணம் என்னும் பேயினால் பீடிக்கப்பட்ட நானும் அப்படியே தங்களிடம் சொன்னேன். இவைகளை எல்லாம் நிஜமென்று நம்பிய தாங்கள் பெரிய எஜமானியை வீட்டை விட்டுத் துரத்திவிட்டீர்கள். பரமசாத்வீக மணியான அந்த அம்மாள் தன்குழந்தையுடன் கண்ணீர் பெருக வீட்டைவிட்டு வெளியேறி விட்டார்கள். அதிலிருந்து இவள் எனக்கு மாதாமாதம் ஏராளமாய்ப் பணம்கொடுத்து வந்தவள், கொஞ்ச நாளாய் என்னை அலக்ஷியம் செய்து வெறுத்து வந்தாள். 2-நாள முன் இக்குழந்தை இரவில் அழுதுகொண்டே, என்வீட்டிற்கு வந்தாள். அவளைப் பார்த்துப் பரிதாபப்பட்டு, அவள் வரலாற்றை விசாரித்தேன். உண்மை வெளிப்பட்டது. மேலும், குழந்தையில் இவள் கையிலிருந்த மருவினாலும் இவளே தங்கள் குழந்தை என்று உறுதிப்பட்டது. நான்செய்த பாபத்திற்குப் பரிகாரம் செய்து விட்டேன். இனி, தாங்கள் எக்கதிவிட்டாலும் அனுபவிக்கத் தயார்'' என்றாள்.

இவ்வரலாற்றைக் கேட்ட பிரபு அளவற்ற ஆச்சர்யமும் பிரமிப்பும் அடைந்து. அழகே உருவாய் தன் எதிரில் நிற்கும் மகளை அழைத்து அன்புடன் அவளைப் பார்த்து, 'என்கண்மணியே! உன்னை இவ்வளவு நாள்பிரிந்திருக்கும்படி நேரிட்டதே!' என்றுவருந்தி மிகுந்த உக்ரகத்துடன, 'அடி சண்டாளிகளோ! நீங்களிருவரும் சேர்ந்து என் உத்தம மனைவிக்கும் என்குலக்கொடியாகிய இக்குழந்தைக்கும் இவ்வளவு இடுக்கண் விளைவித்தீர்களே? உங்களை என்ன செய்தாலும் போதாதே! என்றுநடுக்கத்துடன் நின்றிருந்த கனகவல்லியின் மேல் பாய, ராஜேச்வரி அவரைத் தடுத்து, 'தந்தையே! எங்கள் வினைப்பயனால் இதுவரை கஷ்டப்பட்டோம்; எனக்காகவாவது என் சிறிய தாயாரையும் இந்த செல்லத்தையும் மன்னித்து விடுங்கள். அவளால் தானே நான் தந்தையையடைந்தேன்?' என்றுநயமாய் சொன்னாள். தன்னை அனாதையாய் அலைய விட்ட சிறிய தாயாருக்காகப் பரிந்து பேசுவதைக் கண்ட பிரபு, தன் மகளின் குணத்தை மெச்சி, 'என் கண்ணே! உனக்காக அவர்களை மன்னித்தேன். ஆனால் அவர்கள் இனி என் முகத்தில் விழிக்காமல் போய்விடட்டும் என்று சொல்லி, அம்மா! உன் தாய் எங்கே? நீ எப்படி இங்கு வேலைக்காரியாக வந்தாய்?' என்றார்.

ராஜி, தந்தையே, நான் கொஞ்சநாள் முந்திதான் என் தாயாரிடமிருந்து இந்த உண்மைகளைத் தெரிந்து கொண்டேன். அதிலிருந்து எப்படியாவது இவ்வுண்மையைத் தங்களுக்கு நிரூபிக்கவேண்டுமென்ற எண்ணத்துடன் என் தாயிடம் உத்திரவு பெற்று இங்கு வந்து தாதியாயமர்ந்தேன். 4 நாள் முன் என் சிறிய தாயாரும் இந்தச் செல்லமும் ஒருவர்க்கொருவர் கோபமாய்ப் பேசிக் கொள்வதைத் தற்செயலாய்க்கவனித்தநான், செல்லத்தை விசாரித்தால் ஏதாவது உளவு கிடைக்குமென்ற நம்பிக்கையுடன் சமயம் பார்த்திருந்தேன். என் அத்தான் என் மீது அனுதாபமாய்ப்பேசியதை பொறாதஎன் சின்னமாள், இரவே என்னைத் துரத்தினாள். அதுவே சமயமென்று நான் செல்லத்தின் வீட்டையடைந்தேன். மறுநாள், அத்தான் என்னைத்தேடி வர, இருவரிடமும் உண்மையைச் சொல்லி அழைத்து வந்தாள். என்றாள்' 'சரி தான் கண்ணே! இன்னும் உன் தாய் எங்கே என்று சொல்லவில்லையே?' 'அப்பா! அவளைப் பார்க்க உங்களுக்கு ஆவலிருக்கிறதா? அவள் சமீபத்திலேயே இருக்கிறாள்' என்று சொல்லி, வெளியேயிருந்த தன் தாயை அழைத்து வந்தாள். தன் மனைவியைக் கண்ட பிரபு, 'ஆ! கற்பகம்! உன் உத்தம குணத்தை அறிந்தும் இந்தப் பாவியின் பேச்சை நம்பி, உன்னை இச்சங்கடத்திற்கு ஆளாக்கிய என்னை மன்னிப்பாய்!' என்று சொல்லி அவளை அணைந்து கொண்டார். 'நாதா, இப்பொழுதாவது என் குழந்தையின் விடாமுயற்சியால் தங்களையடைந்தேனே? அதுவே என் பாக்யம், என்றாள் கற்பகம். ஜமீன்தார் தன் மருமகனைப் பார்த்து, 'என்ன சத்யநாதா! தாதியான லீலாவைக் கண்டு இச்சித்த நீ என் மகள் ராஜேச்வரியை மணக்க இஷ்டப்படுவாயோ?' என்று புன்சிரிப்புடன் கேட்டார்.

சத்ய:—மாமா, பணிப்பெண் லீலாவைக் காதலித்த நான், அவள் ஓர் ராஜாத்தியானபின் அவளை மணக்கப் பின் தங்குவேனா?

பிரபு:—என் கண்மணி! உன் இஷ்டமென்ன?

ராஜி:—அப்பா, தங்களிஷ்டம்; நான் ஏழையாயிருக்கும் போதே என்மீது அன்பு கொண்டு எனக்காக எவ்வளவோ பாடுபட்ட என் அத்தானை, இந்த ஜன்மத்தில் மறந்தால் நன்றியற்றவளாவேன் என்று சொல்லித் தலை குனிந்தாள்.

# அனுபவ விநோதங்கள்

(ஸ்ரீமான் எஸ். ஜி. இராமாநுஜலு நாயுடு எழுதியது.)

புது ஆட்பலம் தேடுதல்:—முதல் மனைவி போன பின்பு, தன் தங்கையின் பெண், மாமனின் பெண்கள் இருக்க, அவர்களை மண முடித்துக்கொள்ளின் பழயமனிதர்களின் துணையேதான் கிடைக்குமென்றும், எல்லோரும் அந்த வகையில் தன் வீட்டில் உட்கார்ந்து கொள்வார்களென்றும், இவர்களையெல்லாம் வீட்டை விட்டு வெளியேற்றிவிடக்கூடிய தாயும், தனக்குப் புதிய பந்துஜன சேர்க்கையும்—புதிய ஆட்பலமும் கிடைக்கும் படியாயிருக்கவுமாய் வேறு அன்னிய இடத்தில் பெண்ணைக் கொள்வதே நலமென்றும், அந்தப் பெண்ணும் சொத்துக்களோடு வந்து தனக்கு லாபத்தைக் காட்டுவாளென்றும் சிலர் எண்ணி, அவ்விதமே புதிய இடங்களைத் தேடிச் சென்று சம்பந்தம் செய்துகொள்கிறார்கள். இதற்கு அதிக சுய நல நோக்கும், நெஞ்சழுத்தமும், மனோதைரியமும், பிடிவாத புத்தியும் வேண்டும்.

குளத்தில் விழுந்த குமாரன்:—தன் குமாரன் குளத்தில் தவறி விழுந்து தத்தளிக்கதைக் கண்ட தந்தை அவனைத் தூக்கி எடுத்துத் தேற்றிப் பிறகு, ஆறு, குளங்கட்கு அழைத்துச்சென்று நன்றாக நீந்துவதற்குப் பயிற்சி செய்வித்து, அதில் தேறச்செய்து, இனி ஜலத்தில் மூழ்கிபிறக்கமாட்டாய் என்று சொல்லி விட்டார்.

எதிர்க்கும் மனைவி:—கணவனிடத்து விசுவாசமின்றிஅற்ப சங்கதிகளுக்கெல்லாம் எதிர்க்கும் பெண்ணின் காரியங்கள் அவள் பெற்ற குமாரனுக்கே அருவருப்பாய்ப் படுகின்றது. தன் தந்தையைத் தன் தாயார் வீணே தொந்திரவு படுத்துவதை வெறுப்புடன் நோக்குகிறான். இதிலிருந்து அந்தக் குமாரனின் மனம் தந்தையின் சார்பிலேயே சென்று தந்தையின் பக்கமே நின்று கொள்கிறான். தன் தாயையும் எதிர்த்துப் பேசுகிறான். "இவ்வளவு சிறுபயல் என்னை அப்படிப் பேசலாமா?" என்று அப்பெண் தன் கணவனிடம் முறையிடுகிறாள்: அவரோ "அப்படியா சங்கதி?" என்று மட்டும் கேட்டு விட்டு, மவுனமாய் இருந்து விடுகிறார். தன் குமாரனைக் கண்டிப்பதில்லை. தன் தந்தை தன்னைக் கண்டிக்கமாட்டாரென்ற ரகசியத்தையும் அந்தக் குமாரன் அறிந்து வைத்ததே. கணவனிடம் செல்லுகிற அதிகாரம் குமாரனிடம் செல்லுவதில்லை. சற்று நேரத்திற்குப் பிறகு அவன், 'அம்மா சாதம் போடு' என்று ஓடிவர, தாய்பாசத்துடன் அவனுக்கு அன்னமிடும் படியாகிறது. வீடும் ஸமாஸமாகிறது.

உன் குடும்ப விஷயம்:—உனது குடும்ப விஷயத்தைப் பற்றிய விசாரணைகள் உனது ஏகதேச அதிகாரத்திற்கு உட்பட்ட விஷயம். அதில் உன் க்ஷேமத்தைக் கோராத, நல்ல நினைவே இல்லாத பிறருடைய யோசனையை நீ கேட்கவேண்டிய அவசியமில்லை. ஆயினும், கேட்பதுபோல் நடித்து விட்டு, உன் அபிப்பிராயப் பிரகாரம் காரியங்களை நடத்திச் செல்.

தர்ம நியாயம்:—மாமி மருமகள் சச்சரவில் அவர்களின வாதம் வியவகாரத்துக்குப் பொருத்தமானதாக இருக்கலாமாயினும், தர்ம நியாயத்துக்கு அது பொருத்தமானதாகாது. தர்ம நியாயப்படிப் பார்ப்பின் மாமி மீதும் ஒரு சமயம் குற்றமேற்படும். மருகி மீதும் ஒரு சமயம் தவறுதல் சொல்லவைக்கும்.

பழய இழிந்த நிலை:—முன்பு கேவல வாழ்விலிருந்த தான், தற்போது அதிகார ஸ்தானமான கௌரவ உத்தியோகத்திலிருக்கையில், பழய மனிதனொருவனைச் சந்திக்கிறான். அவனோ முந்திய ஏழ்மைச் சங்கதியை எடுத்துக் கூறி, தானும் அந்த நாளில் கலந்து நின்றதைச் சொல்லவரும்போது, இந்தக் கௌரவ உத்தியோகஸ்தன் அதைக் கேட்காதவன் போல் அபிநயித்து வேறு சங்கதிகளைப் பேச ஆரம்பித்து விடுகிறான். அவனால் எங்கு தன் பழைய நிலை வெளியாகிவிடுகிறதோவென்றும் கலங்குகிறான்.

அதைத் தான் ஏன் எழுத—நோக? ஒருவர் மீது எவ்வளவோ ஆத்திர முண்டாகிறது. அவர் செய்துவிட்ட செயல்கள் மனத்தைக் கொதிக்க வைக்கின்றன. உடனே ஆக்கிரகத்துடன் அவருக்குக் கடிதம் எழுத நினைக்கிறோம். உக்கிரகமான பதங்களையும் அதில் உபயோகிக்கப் பொறுக்கி எடுக்கிறோம். பிறகு—அதைத் தான் அங்கு ஏன் எழுத?—எழுதி விட்டு ஏன் நோக?—அதற்கு முக்காலணா தபாற் செலவு ஏன் செய்ய?—காசைச் செலவிட்டு விரோதம் ஏன் தேட?—என்று நம்மையே நாம் அடக்கிக் கொண்டு தணிந்து போகிறோம். அப்படித் தணிவதில்தான் அதிக நன்மையிருக்கிறது. நாம் எவ்வளவுக்கெவ்வளவு சாந்தப்படுகிறோமோ, சகிக்கிறோமோ அத்தனைக்கும் இரட்டிப்பாக அந்த நமது சாந்தத்தியானது நமக்கு இன்னல் புரிந்தாரை வாட்டி வதைத்து அலறச்செய்து விடுமென்பது—இப்போது இல்லாவிடினும் பிந்திய நாளில் நிச்சயமே.

முன் செய்த வினை:—தன் கணவனின் காலத்தில் தன் மூத்தாளின் மக்களைச் சேரவொட்டாது பிரித்துக் கலக வல்லியாய் விளங்கிய மாற்றாந்தாய் பிற்காலத்தில் தன் மூத்த குமாரனோடு சேர்ந்திருந்து வாழப் பார்த்தாலும்,—ஆதியில் இல்லாத ஒற்றுமை பிறகு உண்டாவது அரிதாதலால்,—இடையிடையே மனஸ்தாபங்கள் பல எதிர்ப்பட்டு வேறு வேறாகப் போகும் படியே நேரிடுகிறது. ஒன்றுபட்டிருக்க இருவராலும் முடிகிறதில்லை. இது மாற்றாந்தாய் முன்பு செய்த வினைபோலும்?

மற்றொரு மாற்றாந்தாய்:—தான்கணவன் வீட்டிற்குள் நுழைந்ததும், அங்கு கைக்குழந்தையாய்க் கிடக்கும் மூத்தாள் குமாரனை எவ்வளவோ பிரியத்துடனும் அன்புடனும் வளர்த்துப் பெரியவனாக்குகிறாள் தனக்கு ஆண் சந்ததியின்றி யாவும் பெண்குழந்தைகளாகவே இருக்கின்றன. இடையே கணவன் காலமாக, சொத்துக்கள்யாவும் மூத்த குமாரனையே சேருகின்றது. அதைப் பற்றி அவளுக்குப் பேதசிந்தையில்லை அந்த மூத்தாளின் குமாரன் தன் தங்கைகளுக்கெல்லாம் விவாகம் நடத்தித் தானும் விவாகம் செய்துகொண்டு தன் மாற்றாந்தாயின் சொற்படி நடந்துகொள்ளுகிறான். இந்த மாற்றாந்தாய் ஸர்வ சுதந்திர அதிகாரத்துடன் வாழ்கிறாள். தன் குமாரன் என்ற எண்ணமே தவிர, மூத்தாள் மகன் என்ற நினைப்பே அவளுக்கில்லை மனம்போல வாழ்வு.



மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் 31-வது வருஷாந்தக் கொண்டாட்டம் ராமநாதபுரம் ராஜாவின் தலைமையில் சமீபத்தில் நடந்தபோது எடுத்தபடம்

கே. டி. வி.




## ஒழிவு நேர வேலை.

(ஆத்ரேயன் எழுதியது.)

### புஸ்தகக் கோள்.

அப்யாசம் 4

படத்திலுள்ளது ஒரு புஸ்தகக் கோள். இதை நாம் வெகு சுலபமாகச்செய்யலாம்; ஜாதிக்காய் பலகையில் $\frac{3}{4}$'' கனத்தில் 18''×6'' அளவுகளுள்ள ஒரு பலகையும் 16''×6'' அளவுகளுள்ள மற்றொரு பலகையும் $12\frac{1}{2}$''×$1\frac{1}{2}$''×$\frac{1}{2}$'' ஒரு சட்டமும் இது செய்வதற்குப் போதும். புதிய ஆயுதங்கள் ஒன்றும் தேவையில்லை.

நமக்கு இப்பொழுது இழைப்பதில் கொஞ்சம் பழக்கம் ஏற்பட்டிருக்கிறபடியால் பலகைகளையும் சட்டத்தையும் அகலகனங்களை அதிகமாகக் குறைக்காமல் இழைக்கவேண்டும். நன்ருக இழைக்கப்பட்ட பலகைகளினுல் செய்யப்பட்டால் எவ்வஸ்துவும் மிகவும் நன்ருக இருக்கும். பக்கப் பலகைகளின் அளவுகள் படத்தில் காணப்படுகின்றன. 16'' நீளப் பலகையில் பக்கப் பலகைகளுக்கு வேண்டிய அளவுக் கோடுகளை வரைந்து கொண்டு கோடுகளுக்குச் சரியாக அறுக்க வேண்டும். 18'' நீளப் பலகையில் நுனிகளைச் சதுரித்து அறுத்தால் போதும். சட்டத்தை அடிப் பலகையின் அகலத்திற்குச் சரியான நீளமுள்ள இரண்டு சட்டங்களாக அறுக்க வேண்டும். அடிப்பலகையின் மேல் பக்கத்திலுள்ள இரண்டு நீள ஓரங்களையும் கோடி மாற்றி அடிப் பக்கத்தில் இரண்டு நுனிகளிலும் ஓரங்களை ஒட்டினுல் போல் இரண்டு சட்டங்களையும் வைத்துத் தலை நசுக்கின'' கம்பி ஆணிகளை சட்டங்களின் அடிப்புறங்களிலிருந்து அடித்து அடிப் பலகையுடன் சேர்க்க வேண்டும். ஆணிகளின் தலைகளை (குடைகளை) சுத்தியினுல் நசுக்கிப் பலகையில் அடித்தால் அவை பலகைக்குள் நன்ருய் இறங்கிவிடும். பிறகு அந்த இடங்களில் மக்குப் பூசி வர்ணம் பூசலாம். பக்கப் பலகைகளில் உள் பக்கங்களின் அடி ஓரங்களிலிருந்து $1\frac{1}{4}$''விட்டு மற்ற ஓரங்கள் எல்லாவற்றையும் கோடி மாற்றவேண்டும். இப்பொழுது அடிப் பலகையுடன் வஸ்துவின் உருவம் உண்டாகும்படிப் பக்கப்பலகைகளைச் சேர்த்து வைத்து ஆணிகளடிக்க வேண்டிய இடங்களைக் கீற்றூசியினுல் குத்திக் கொண்டு பிறகு $1\frac{1}{4}$ அல்லது $1\frac{1}{2}$'' கம்பி ஆணிகளின் தலைகளை நசுக்கிப் பலகைகளைப் படத்திலுள்ளபடி சேர்த்து வைத்து அடிக்க வேண்டும். ஆணிகள் அடிப் பலகையிலும் அதன் அடியிலுள்ள சட்டங்களிலும் இறங்கினுல் இந்தச் சாமானுக்கு அதிக வலுவு ஏற்படும்.

இதற்கு வர்ணப் பூச்சு பூசினுல் இதன் மரம் கெடாமலிருக்கும். பார்ப்பதற்கும் அழகாக இருக்கும். அப்படிச் செய்ய முதலில் ஆணி அடித்த இடங்களிலும் இடுக்குகள் உள்ள இடங்களிலும் மக்குப்பூசி அது நன்ருய்க் காய்ந்ததும் சுரசுரப்புக் காகிதத்தினுல் நன்ருய் தேய்த்துச் சுத்தம் செய்வது வழக்கம். இரும்புக் கடைகளில் பலவித வர்ணப்பூச்சுகள் டப்பிகளில் உபயோகத்திற்குத் தயாராகக் கிடைக்கின்றன. அவைகளில் நமக்கு வேண்டிய ஒரு டப்பியும் ஒரு $\frac{3}{4}$'' அல்லது 1'' ப்ரஷ்ஷும் இதற்குப் போதும். இந்த டப்பியின் மூடியைத் திருப்புளியினுல் நெம்பித்திறந்து விடலாம். டப்பிக்குள் வர்ணம் அடியில் படிந்திருக்கும். அதன்மேல் எண்ணெய் தெளிந்து இருக்கும். பூச ஆரம்பிப்பதற்கு முன் வர்ணத்தை ஒரு குச்சியினுல் நன்ருய்க் கலக்கவேண்டும்.

ப்ரஷ்ஷில் அதிக வர்ணத்தை எடுத்துக்கொண்டு வர்ணம் வழிந்து ஓடும்படிப் பூசக்கூடாது. மெல்லியதாய் ஒரு முறை பூசி அது நன்ருய்க் காய்ந்ததும் மறுமுறை பூசுவது நலம். இரண்டாவது பூச்சுக்கு முன் இவ்வஸ்துவைக் கடல் நுரையினுல் அதிகமாக அழுத்தாமல் ஜலத்தை ஊற்றித் தேய்த்தால் முதல் பூச்சினுல் ஏற்பட்ட மேடு பள்ளங்களும் சுரசுரப்புகளும் மறையும். ஜலம் காய்ந்தவுடன் மறுமுறை வர்ணம் பூசினுல் நன்ருயிருக்கும். இவ்விதம் இரண்டு மூன்று பூச்சுக்கள் பூசினதும் இதன்மேல் வார்னிஷ் பூசினுல் இது பார்ப்பதற்குப் பளபளப்பாயிருக்கும்.

சிறுவர் கதை.

## சாமர்த்தியமான தையற்காரன்.

முன்னொரு காலத்தில் மகதநாட்டில் தத்தன் என்று ஒரு அரசனிருந்தான். ஒரு நாள் அந்த ராஜாவும் மந்திரியும் தோட்டத்தில் தனியாகப்பேசிக்கொண்டிருந்தனர். அச்சமயம் அரசனுக்குச் சமீபத்திலுள்ள மாமரத்திலிருந்து மாம்பழம் பறித்துச் சாப்பிட வேண்டுமென்று அவா ஏற்பட்டது. கிளை கைக்கு எட்டாததால், மந்திரி தன் தோள்மீது ஏறி அந்தப் பழத்தைப் பறித்துக்கொடுக்குமாறு ராஜா கேட்டுக்கொண்டான். மந்திரி அதற்கிணங்கி மாம்பழத்தைப் பறித்துக்கொடுத்தான். அப்போது ஒரு பிச்சைக்காரன் அவர்கள் முன் தோன்றித் தனக்கு மன்னிப்பு அளிப்பதாக எழுதிக் கொடுக்குமாறு அரசனைக் கேட்டுக்கொண்டான். அவன் குற்றம் செய்யாதிருக்கையில் மன்னிப்பு எதற்காகவென்று அரசன் கேட்டதற்கு அவன் தனது கோரிக்கைக்கு இணங்குமாறு மிகவும் மன்றாடிக் கேட்டுக்கொண்டான். கடைசியாக அரசன் பிச்சைக்காரன் கேட்டபடி ஒரு மன்னிப்பு எழுதிக்கொடுத்தான்.

சிறிதுகாலத்திற்குப்பின் அரசனுக்கும் மந்திரிக்கும் மனஸ்தாபம் ஏற்படவே அரசன் மந்திரியையும் அவனுடைய உறவினர்கள் அனைவரையும் கொன்றுவிடுமாறு உத்தரவிட்டான். அப்படியே அவர்களெல்லாம் கைது செய்யப்பட்டபோது முன்பு பிச்சைக்காரனாகத் தோன்றியவனும் உறவினர்களில் ஒருவனாகவிருந்தான். அவன் தனக்கு அரசன் அளித்த மன்னிப்புக் கடிதத்தைக் காட்டி விடுதலை பெற்றான். காவலாளிகள் அவனை அரசன்முன் கொண்டுபோகவே, அவன் தான் முன்பு மந்திரி ராஜாவின் தோள் மீது ஏறியதைக் கண்டு, மரியாதை தவறியதால் அபாயம் நேருமென்று உணர்ந்து மன்னிப்புப் பெற்றதாகத் தெரிவித்தான். உடனே ராஜா அவனுடைய திர்க்கதரிசனத்தைப் பாராட்டி அவனையே மந்திரியாக நியமித்தான்.

மந்திரியும் அவனுடைய உறவினர்களும் கொல்லப்பட்டபோது அவனுடைய பிள்ளை ஒருவன் மாறுவேடம் தரித்துத் தப்பியோடி ஒரு தையற்காரனிடம் வேலைக்கமர்ந்தான். அரசன் இரவில் மாறுவேடமணிந்து ஊரைச் சுற்றிவந்தான். ராஜாவின் உடை ஒன்று தையற்காரனிடம் வேலையாகிவந்தது. இந்த வாலிபன் ராஜாவின் உடையைத்தன் தலையின்கீழ் வைத்துக்கொண்டு தூங்குவதைக் கண்டு அரசன் கோபமடைந்தான். தன்னுடைய உடையைத் தலையின்கீழ் வைத்துக்கொண்டு அவன் எப்படித் தூங்கலாம் என்று கேட்டான். அதற்கு வாலிபன், சரீரத்திற்குள் தலையேசிறந்ததென்றும், ஆகவே அரசர் உடையை வைத்திருக்கத் தலையே தகுந்த இடமென்றும் சமாதானம் கூறினான். அரசன் இதைக்கேட்டுச் சந்தோஷமடைந்து தையற்கார வாலிபனுக்குச் சன்மானமளித்தான்.

சிறிது காலத்திற்குப் பின் ராஜா தன்பெண்ணுக்குக் கல்யாணம் செய்விக்க விரும்பினான். இரண்டு பொம்மைகளைப் பரீக்ஷையாக வைத்து அவற்றின் வித்தியாசத்தையும் ரகஸ்யத்தையும் விளக்குகிறவனுக்குத்தான் தனது பெண்ணைக் கொடுக்க முடியுமென்று அறிவித்தான். எல்லாருக்கும் இரண்டும் ஒன்றாகவே தோன்றின. அதன் ரகசியத்தைக் கண்டுபிடிக்க ஒருவராலும் முடியவில்லை.



ஒடியாமல் வளையும் கண்ணாடி. இங்கிலாந்தில் செயிண்ட் ஹெலன்ஸில் டிரிப்ளெக்ஸ் ஆலையைச்சேர்ந்த 5 பெண்கள், கால் அங்குல கனமுள்ள ஒரு கண்ணாடி பிளேட் மீது நின்று அது ஒடியாமல் எஃகுபோல் வளைந்து கொடுப்பதைக் காட்டுகின்றனர். பி. பி. ஏ.

கடைசியாக அந்தத் தையற்கார வாலிபன் தான் கண்டுபிடிப்பதாக முன்வந்தான். அவன் ஒவ்வொரு பொம்மையின் காதிலும் ஊசியைவிட்டுப் பார்த்தான். ஒரு பொம்மையில் ஊசி காது வழியாக உள்ளே சென்று வாய் வழியாக வெளியே வந்தது. மற்றொன்றில் காது வழியாக உள்ளே போன ஊசி வெளியே வரவில்லை. உடனே தையற்காரன் அரசனிடம் சென்று இரண்டாவது பொம்மையே விசேஷமானதென்று கூறினான். ஆனால் அரசன் இதோடு திருப்தியடையாமல், இரண்டாவது பொம்மை மேலானதென்று கூறுவதன் காரணமென்னவென்று கேட்டான். காதால் கேட்டதை மனதில் வைத்துக்கொள்ளாமல் வெளியே கூறிவிடுவதை முதல் பொம்மை காட்டுவதாயும் காதால கேட்பதை வெளியே விடாமலிருப்பதை இரண்டாவது பொம்மை காட்டுவதாயும் ரகஸ்யத்தை வெளியிடாமலிருப்பதே மேலென்றும் தையற்கார வாலிபன் கூறினான். அரசன் இதைக் கேட்டுச் சந்தோஷமடைந்து அந்த வாலிபனுக்குத் தன் பெண்ணைக் கலியாணம் செய்துகொடுத்து அவனே தனக்குப் பின் ராஜாவாக வருமாறு செய்தான். கல்யாணம் நடந்தபின் வாலிபன் தான் மந்திரி குமாரனென்பதை வெளியிட்டுத் தன்னை மன்னிக்குமாறு அரசனை வேண்டிக்கொண்டான். அரசனும் அவனுடைய சாமர்த்தியத்தைப் பாராட்டி அப்படியே மன்னித்தான்.